

ப்ரபன்ன பாரிஜாதாய தோத்ரவேத்ரைகபாணயே ।
ஞானமுத்ராய க்ருஷ்ணய கீதாம்ருததுஹே நம:

அடைக்கலம் அடைந்தவர்களுக்கு கற்பக மரம் போன்றவனும், பசுவை ஓட்டுதற்கு ஒரு கையில் பிரம்பைப் பிடித்திருப்பவனும், கீதை என்னும் அமுதத்தைக் கறந்தவனும், சின் முத்திரை தாங்கியிருப்பவனும் ஆகிய கண்ணனை வணங்குகிறேன்.

--தியான ஸ்லோகம-3.

# ஸப்தகிரி

டிசம்பர்-1991

தனிப்பிரதி ரூ. 1 மலர் 22

வருடச்சந்தா ரூ. 12 இதழ் 7


## உள்ளுறை

பக்கம்



அட்டைப்பட விளக்கம்

முன்னட்டை : ஆண்டாள் திருக்கோலத்தில் ஸ்ரீபத்மாவதி தாயார் - திருச்சானூர் கோயில் பிரம்மோத்ஸவத்தின் போது.

முதல் உள்ளட்டை: திருக்குளம்.

2-வது உள்ளட்டைசக்ரஸ்நானம்-திருச்சானூர் திருக்கோயில்.

பின்னட்டை : கோவிந்தனின் கோதை -சித்திரம்: கிரிதத்.


சிறப்பாசிரியர் :

திரு. எம்.வி.எஸ். பிரஸாத், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர்:

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.,

துணையாசிரியர்:

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


JAGADISH

# உங்களுடன்....

இந்து மதம் என்று தோன்றியது? தெரியாது! இந்து மதத்தைத் தோற்றுவித்தவர் யார்? தெரியாது! இந்து மதம் யாரால் வளர்க்கப்பட்டது? தெரியாது! இந்து மதத்தின் பெருமையை விளக்கிடும் நூல் ஒன்றின் பெயரைக் கூற முடியுமா? முடியாது! இப்படிக் கேள்விகளுக்கான பதில்கள் எதிர் மறையாக அமைந்திருப்பதே அம்மதத்தின் பெருமையைக் கூறிடும் என்பது பலருக்குத் தெரியாது. இயற்கையின் பின்னணியில் இறைவனை வழிப டுவதற்கு முன்பேயே, அருவ வழிபாடு என்பது இம்மண்ணிற்குப் புதியதல்ல. ஞானத்தின் உச்சியை அடைந்து கடவுளைக் கண்டதும், அவனை வழிபடும் முகத்தான் அதற்கான தத் துவக் கோட்பாடுகளை உருவாக்கியதும், அதன் வழியில் ஒரு மதத்தைத் தோற்றுவித்ததும் யாவும் உலக சமய வரலாறும், தத்துவ ஞானிகளும் அறுதியிட்ட செய்திகளாகும்.

இந்து மதம் பழமை என்பதால் அதன் பெருமை என்றும் பழுதடைந்திடவில்லை. வாழ்க்கை முறைகள் மாறலாம்; கலைகள் மாறலாம்; மனிதன் மாறலாம்; அவன் மனநிலை களும் விபரீதமாகலாம். ஆனால் மனிதன் மனிதனாக வாழ வேண்டியதற்கு அவசியமான வாழ்க்கை உண்மைகள், அறப்பண்புகள் என்றென்றும் மாறமாட்டா. அவ்வுண்மைகள்மீது எழுப்பப்பட்ட மாபெரும் மாளிகைதான் இந்து மதம் எனப்படுவதாகும்.

இந்து மதத் தத்துவ பெருமைகளை, கடவுட்டுண்மைப் பொருளை விளக்குவதற்காக எழுந்தவைதாம் வேதங்களும், உடநிடதங்களும், புராண இதிகாசங்களுமாகும். இஸ்லாமியம் என்றால் குரான் என்றும், கிறித்துவம் என்றால் பைபிள் என்றும் அவர்கள்தம் சாஸ்திரங்கள் உடனடியாக நினைவிற்கு வருவது போன்று, இந்து சமயம் என்றால் இதுவேதான் அதன் பெருமையைக் கூறிடும் சாஸ்திர நூல் என்று பெயர் சொல்லி ஒன்றினைக் கூறிடமுடியாது. இது இந்துமதத்தின் பலமா அல்லது பலவீனமா? என்று பலருக்கு ஐயமேற்படலாம். ஒருருக்குச் செல்ல பல சாலைகள் அமையுமானால் அதனால் அவ்வூரின் சிறப்புத் தெரிய வருமா - பலவழிகளில் அவ்வூரை விரைவில் அடைந்திட வழி வகுக்குமா - போன்ற பல கேள்விகளை நமக்குள் எழுப்பினால், முந்தைய ஐயத்திற்கு விடை கிடைத்திடும்.

எனினும் இந்து சமயத்தின் சீரிய பெருமைதனை விளக்கிட சாஸ்திரங்கள் பல விளங்கினாலும் இவை அனைத்தின் சாரமாக விளங்குவது 'கீதை' என்று துணியலாம். பிரஸ்தானத்ரயத்தின் ஓர் அங்கமான இக்கீதையின் சிறப்பு அது போதித்த வாழ்க்கைப் பேருண்மைகளின் மீதும், மானிட வாழ்வின் மேம்பாட்டு அறவுரைகளின் மீதுதான் பேசப் பெறுகின்றது. கீதையின் போதனைகள் யாவும் ஞானியர் மட்டுமே அறிந்து கொள்ள அல்ல. நன்மை தீமைகளுக்கு இடையே சிக்குண்டு, நாளும் பிரச்சனைகளால் சூழப்பட்டு, குழப்பத்தின் உச்சியில் நின்று பரிதவித்திடும் ஒரு சாதாரண மனிதனை மனதிற்கொண்டு தான் உபதேசிக்கப்பெற்றுள்ளது. ஆம், கண்ணன் கீதையை, எல்லாம் தெரிந்த தரும னுக்கோ, அல்லது வஞ்சினம் ஒன்றினையே நெஞ்சினில் கொண்டு, உடல்பலத்தை மட்டுமே தனது ஆற்றலாகக் கொண்டு விளங்கிய பீமனுக்கோ உணர்த்திடவில்லை. நல்லியல் புகளுக்கும் புல்லியல்புகளுக்கும், பாசத்திற்கும் பந்தத்திற்கும், வெற்றிக்கும் தோல்விக்கும், அறத்திற்கும் மறத்திற்கும் இடையே அகப்பட்டுக் குழப்பத்தின் உச்சியில் விளங்கிட்ட பார்த்தனுக்குப் பகர்ந்திட்டான் பகவான். வாழ்க்கை எனும் போர்க்களத்தில் நாளும் பிரச்சனைகளுடன் சமர்செய்து கொண்டிருக்கும் சாமான்யனுக்கு அறிவுறுத்தவே, போர்க்களத் தில் போர்ப்பறைகளின் ஓசையின் நடுவிலே தனஞ்சயனுக்கு தத்துவ முரசு கொட்டினான்

(48-ஆம் பக்கம் பார்க்க)

# பரந்தாமனைப் போற்றும் பன்னிரு திருநாமங்கள்

டாக்டர் ஏ.வி. ரெங்காச்சாரியார் - பத்தமடை.

திருவுக்கும் திருவான செல்வன், தெய்வத்துக்கரசன், செய்யக்கண்ணன், உருவச்செஞ்சுடராழிவல்லானான திருமாலுக்கு எண்ணற்ற திருநாமங்கள் உண்டு. "பேராயிரமுடைய பேராளன்" என்று திருமங்கையாழ்வாரும், "பலபலவே ஆபரணம் பேரும் பலபலவே"-என்று நம்மாழ்வாரும் பாடிப்பரவுகின்றனர்.

இத்தகைய எண்ணற்ற திருநாமங்களுள் ஆயிரம் நாமங்களைத் தேர்ந்தெடுத்து, பீஷ்மர் யுதிஷ்டிரருக்குக் கூறியதே ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம் ஆகும். இந்த ஆயிரம திருப்பெயர்களையும் பன்னிரண்டு நாமங்களுள் அற்புதமாக அடககிப் பாடியுள்ளனர் ஆழ்வார்கள். பன்னிரு திருநாமங்கள் என்றும், த்வாதஸ நாமங்கள் என்றும் பாராட்டப்படும் இவை ஸ்ரீமந் நாராயணனுக்கு உகப்பானவை. இவை பரந்தாமனது விழுப்புகழைப் பறை சாற்றுகின்றன. வைணவர்கள் போற்றும் இப்பன்னிரு நாமங்களின் சிறப்பைக் காண்போம்.

1. கேசவ:

முதல் திருநாமம் இதுதான். கேச என்ற அசுரனைக் கொனறதால இப்பெயர் வந்தது என்பர ஆனறோர். துன்பங்களை அகற்றுவதாலும், சுருண்டிருணட கேசத்தை (தலை முடி)ப் பெற்றுள்ளதாலும் கேசவனாகிறான் என்ற பொருளும் உண்டு. பரமசிவன் ஒரு முறை நாராயணனைக் குறித்துக் கடுந் தவம் செய்ய நாராயணனும் தோன்றி "என்ன வரம் வேண்டும்?" என்று கேட்க, சிவபிரானும், "அனைவரும் என்னை மதிக்குமாறு நீர் என்னிடம் ஒரு வரம் கேட்க வேண்டும்" என்று விண்ணப்பித்தாராம். கண்ணனாக அவதாரம் செய்த காலத்தில் திருமால் பரமசிவனிடம் தனக்கு ஒரு மகவை அருளுமாறு வேண்டினாராம். இதைக்கேட்ட சிவபிரான் "எங்களுக்கெல்லாம் தந்தையான நீங்கள் வரம் கேட்பது உங்கள் பெருந்தன்



மையைக் காட்டுகிறது'' என்று பாராட்டி, 'கேசவன்' என்ற திரு நாமத்தை வழங்கினாராம். இவ் வாறு கூறி ஸ்ரீஆதிசங்கரர் விளக்கம் கூறுவார்.

**2. நாராயண:**

இது இரண்டாவது திரு நாமம். உலகிலுள்ள அறி வுள்ள அறிவற்ற அனைத்துப் பொருட்களுக்கும் ஆதாரமான வன் என்பது இதன் பொருள். இப்பொருட்களையே இருப்பி டமாகக் கொண்டவன் எனலாம். உடலுக்குள் உயிர் உள்ளது. உடலுக்கு ஆதாரம் உயிர். அந்த உயிருக்குள்ளும் பகவான் அந்தராத்மாவாக இருக்கிறான். ''உடன்மிசை உயிர் எனக்க ரந்து எங்கும் பரந்துளன்'' - என்பார் நம்மாழ்வார். இப் படி அவன் உறைவதால் அவ னது வாத்ஸல்யம் (உயிர்களி டம் அன்பு) வெளிப்படுகிறது.

**3. மாதவ:**

மூன்றுவது திருப்பெயர் இது. மா என்பது திருமகளைக் குறிக்கும். மாதவ என் றால் திருமகளை மார்பில் தாங் கிக் கொண்டிருப்பவன் என்று பொருள். மாலைவிடத் திரு மாலுக்கே பெருமை. நாராய ணனை விட ஸ்ரீமந் நாராயண னுக்கே பெருமை என்பது ஆன் ரோர் திருவாக்கு. 'இறையும் அகலகில்லேன்' என்ற அலர் மேல் மங்கையைத்திருமார்பில் தாங்கி, 'அலர்மேல் மங்கை உறைமார்பன்' என்று போற் றப்படுகிறான். ''பிராட்டி பக வானை அழகாலே திருத்தும், சேதனனை அருளாலே திருத் தும்'' - என்கிறார் ஸ்ரீபிள்ளை லோகாசார்யார். சேதனர் கட்கு மோக்ஷம் வழங்குமாறு பரிந்துரைப்பவள் பிராட்டியே. 'வேறி மாறாத பூமேல் இருப் பாள் வினைதீர்க்குமே' என்பார் நம்மாழ்வார். ''ஸ்ரீயம் லோகே தேவஜுஷ்டாம் உதாராம்' - என் கிறது வேதம். உலகிலுள்ள உயிர்களுக்கெல்லாம் தாயாகத் திகழ்பவள் பிராட்டி. காகாசு ரன் தலை தப்பியதற்குக் கார ணம் பிராட்டி அருகில் இருந் ததால். இராவணன் தலை கள் அறுபடக்காரணம் பிராட்டி தனித்திருந்ததால். ''திருவில் லாத்தேவரைத் தேறேல் மின் தேவு'' என்பார் திருமழிசைப் பிரான்.

**4. கோவிந்த:**

கோ என்ற சொல் விரிந்த பொருளுடையது. கோ என் றால் வாக்கு, பசு, பூமி என் பர். எல்லாச் சொற்களா லும் போற்றப்படுபவன், பிர ளய காலத்தில் பூமியைக் காத் தவன், பசுக்களை மேய்த்தவன் என்றெல்லாம் பொருள் கூற லாம். மறைகளுக்கும் எட்டாத மாயவன் மாடுகளின் பின்னே சென்றான். ''கன்று மேய்த்து இனிது உகந்த காளை'' என் பார் திருமங்கைமன்னன். கண் ணன் கைப்பட்டதால் கோகு லத்திலுள்ள பசுக்கள் வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்களாகி விட்டன என் பது கோதையின் அனுபவம். ''கன்று மேய்த்து விளை யாடவல்லானை வரை மீகா னில் தடம் பருகு கருமுகிலை'' என்கிறார் திருமங்கைமன்னன். கன்று மேய்த்து விளையாடுப வன், நீர்நிலைகளில் நீரைப்பரு கும் முகில் போன்றவன் என் பது இதன்பொருள். கவி பராசரபட்டர் என்ற ஆசார்யர் இதற்கு அருமையாக விளக் கம் தருவார். இளங்கன்றுக ளுக்கு எவ்வாறு நீரைப் பருகு வது என்பதைக் கண்ணன், தன் கையைப் பின்னால் கட் டிக்கொண்டு குனிந்து குளத்தி லுள்ள நீரை உறிஞ்சிக் காட் டினானாம். கன்றுகளும் குடித் தனவாம். கண்ணன் நீரைப்ப ருகும் காட்சி மேகம் நீர் பரு குவது போல் இருந்தனவாம். கோவிந்தன் என்ற திருப்பெ யர் சிந்தாமணிக்கு ஒப்பானது. கேட்பதை எல்லாம் தரவல்லது என்பர் முன்னோர். க்ஷத்தி ரபந்து என்பவன் கோவிந்த நாமத்தைச் சொல்லி உயர்ந்த பேற்றை அடைந்தான் என்பார் விப்ர நாராயணர். 'கோவிந்தா என்ற சிறிய நாமம் கிருஷ்ணாவ தாரத்தில் பெரிய திருநாமமா னது' என்பர் உரைகாரர்.

**5. விஷ்ணு:**

எல்லாப் பொருட்களிலும் நீக் கமற நிறைந்துள்ளவன் என்று பொருள். 'கரந்தசில் இடந்தோ றும், இடம்திகழ் பொருள்தோ றும், கரந்தெங்கும் பரந்துளன்' என்பார் நம்மாழ்வார். எங்குப் வியாபித்திருப்பவன் என்று கூற லாம். 'பார்க்கும் இடமெல் லாம் நீக்கமற நிறைந்த பரி பூரணன்' என்பார் தாயுமான வர். ''கல்லினுட் சிறுதேரைக் கும், கருப்பை அண்டத்துயிர்க் கும், புல்லுணவு அளித்துக் காக்கும் புனந்துழாய்க்கண்ணி அண்ணல்'' என்பார் தேவராச பிள்ளை. (குசேலோபாக்கியா னத்தில்)

**6. மதுஸூதந:**

ஐம்புலன்களையும் ஈர்ப்பவர் **என்**றும், மது என்ற அரக்**கனைக்** கொன்றவர் என்றும் **பொருள்** கூறலாம். தர்**மத்தை** நிலைநிறுத்தி, அடியார்**களைக்** காப்பாற்றி, அவர்களு**டைய** விரோதிகளை அழிப்**பவன்** என்பதை இப்பெயரால் **உண**ரலாம்.

**7. த்ரிவிக்ரம:**

**தனது** மூன்றடியால் உலகங்**களை** அளந்தவன். இந்திரனது **குறை**யைப் போக்க மகாபலியி**டம்** மூவடி மண்யாசித்துப் பெற்**றான்**. பிறகு ஓங்கி உலகளந்த **உத்தம**ன் ஆனான். இந்திர**னது** குறை தீர்ந்தது என்ற **பூரி**ப்பால் பரமனின் உடல் **பெருத்தது**. ஓங்கி உலகளந்**தான்**. பிறரைத் துன்புறுத்தி **வாழ்**பவன் அதமன். தான் மட்**டும்** வாழ்ந்தால் போதும் என்**றிரு**ப்பவன் மத்யமன் - தான் அழிந்தாலும் பிறர் வாழ வேண்டுமென்று நினைப்பவன் உத்தமன். இந்திரனது ஆட்சியை அபகரித்த மகாபலி அதமன். தனது ஆட்சி தனக்குக் கிட்டினாற்போதும் என்றிருந்த இந்திரன் மத்யமன். இந்திரன் குறைதீர்க்க யாசகனாகச் சென்று மூவடி மண்கேட்ட இறைவனே உத்தமன். தன்புகழையும் குறைத்துக் கொண்டவனல்லவா அவன்!

**8. வாமன:**

குள்ளமான வடிவம் கொண்டவன். த்ரிவிக்ரமனனான நிலைக்கு முந்திய நிலை இது. 'இந்திரனுக்குத் துன்பம் வருவதற்கு முன் நாம் காப்பாற்றவில்லையே' என்ற வருத்தத்தால் இறைவன் திருமேனி குறுகி விட்டதாம். வாமனன் முன்பும், திரிவிக்ரமன் பின்பும் சொல்லப்படவேண்டும். உயர்ந்ததே முடிவாகச் சொல்லப்பட வேண்டும் என்பதால் த்ரிவிக்ரமன் வாமனன் என்று சொல்லப்படுகிறது. வாமனன்தான் அழகானவன். 'அற்புதன்' என்கிறார் கம்பர். 'குறைகழல்கள் நீட்டி மண் கொண்ட கோல வாமனன்' என்பார் சுவாமி நம்மாழ்வார். மிகப்பெரிய திருமேனியை விட மிகச்சிறிய திருமேனி எப்படி அழகாக இருக்கும்? என்ற வினாவிற்கு ஆசார்யர்கள் அற்புதமாக விளக்கம் தருகிறார்கள். படிப்பாலின் சுவையைவிட அதை வற்றக் காய்ச்சிய திரட்டுப்பாலுக்குச் சுவை அதிகம். படிப்பாலின் சுவை முழுவதும் திரட்டுப்பாலில் அடங்குவது போல் பகவானின் முழு அழகும் மூன்றடி வாமனனுக்குள் அடங்கி விட்டதாம். வாமனன் தோற்றம் நெஞ்சம் நிறைந்திருப்பதால் த்ரிவிக்ரமனுக்கு அடுத்து வாமனன் திருநாமம் பேசப்படுகிறது.

---

## கருட வாகன சேவையின் பெருமை

பெருமாளும் நல்ல பெருமாள்; அவர்தம்
திருநாளும் நல்ல திருநாள் - பெருமாள்
இருந்த இடத்தில் சும்மா இராமையினால் ஐயோ!
பருந்து எடுத்துப் போகிறதைப் பார்.

--கவி காளமேகம்

பொருள்:- பெருமையில் சிறந்த திருமால் நல்லவராம், அவருடைய திருவிழாவும், கண்டு இன்புறுவதற்கு உரிய திருவிழாவே. பெருமாள் வீற்று இருக்கின்ற இடத்தில் சும்மா இராமல் அன்பருக்கு அருள் புரிவதினாலே அந்தோ! அவரைப் பருந்து என்னும் பறவை தூக்கிச் செல்லுகின்றதைப் பார்ப்பாயாக!

கருட வாகன சேவை பார்க்கத்தக்கது என்பது கருத்து.

தகவல்: கமலவேணி தனபதி - திருச்சி.

**9. ஸ்ரீதர:**

திருமகளைத் தரிப்பவன் என்று பொருள். மணி ஒலியையும், மலர் மணத்தையும் தரிப்பது போல் திருமால் திருமகளைத் தரித்திருக்கிறான். தாய் போன்ற திருமகள், நமக்கெல்லாம் அபயம் அருளும்படி பகவானிடம் பரிந்துரைக்கிறாள். எம்பெருமானின் அளவிலாக் கருணை வெளிப்படுவதற்குப் பிராட்டியே காரணமாகிறாள். தாயான பிராட்டியைத் தரிப்பதால்தான் நாராயணனுக்குப் பெருமை.

**10. ஹ்ருஷீகேச:**

புலன்களான இந்திரியங்களைத் தன் ஆணைப்படி நடத்தி வருபவன் என்று பொருள்.

**11. பத்மநாப:**

"கொப்பூழில் எழுகமலப் பூவழகர்" என்று ஆண்டாள் அனுபவிப்பது போல் நாபீகமலத்தை உடையவர். உலகை எல்லாம் படைத்தவன் இவன் என்பதை நாபீகமலம் காட்டுகிறது. நாபிகமலத்தில் பரமனைப் படைத்தான்.

"உந்தி மேல் நான்முகனைப்
படைத்தான்"

என்பது கலியன் வாக்கு.

"நான்முகனை நாராயணன்
படைத்தான்,
நான்முகனும் தான் முகமாய்
சங்கரனைத் தான் படைத்தான்"

என்பார் திருமழிசையாழ்வார்.

"முதலாம் திருவுருவும்
மூன்றென்பர் ஒன்றே
முதலாகும் மூன்றுக்குமென்பர் -
முதல்வா
நிகரிலகு காருருவா
நின்னகத்ததன்றே
புகரிலகு தாமரையின் பூ"

என்பார் நம்மாழ்வார்.

**12. தாமோதர:**

தழும்புள்ள வயிறுடையவன் என்று பொருள். வெண்ணெய் திருடியதற்காக யசோதை கண்ணனை உரலில் கயிற்றால் கட்டிப்போட்டாள். அந்த அடையாளத்தைத் தன் வயிற்றில் கொண்டவனாம் கண்ணன்.

'கண்ணிநுண் சிறுத்தாம்பினால்
கட்டுண்ணப் பண்ணிய
பெருமாயன்'

என்பார் மதுரகவியாழ்வார்.

'கடல்வயிறு' கலக்கியகை
யசோதையின் கடைக்கயிற்றால்
கட்டுண்கை

என்பார் இளங்கோவடிகள்.

தாமோதரன் என்ற திருப்பெயர் பகவானது எளிமையைப் புலப்படுத்தும். தாயின் கட்டை அவிழ்க்க ஆற்றல் இல்லாதவனாக இருந்தானாம்.

"மத்துறு கடைவெண்ணெய் களவினில் உரலிடையாப்புண்டு எத்திறம் உரலினோடு இணைந்திருந்து ஏங்கிய எளிவே" என்று ஆறு மாதம் மோஹித்துக் கிடந்தார் நம்மாழ்வார்.

'சேஷியின் திருவிலச்சினை இது' - என்கிறார் ஸ்ரீபாராசர பட்டர். அடியார்களின் அன்பிற்கு இறைவன் கட்டுப்பட்டவன் என்பதையே இத்தழும்பு காட்டுகிறது.

வைஷ்ணவர்கள் திருமாலின் சங்கு சக்கரங்களைத் தம் தோளில் தரித்துக் கெர்ள்கின்றனர். இதனால் திருமாலடியாராகின்றனர். திருமாலும் நமக்கு ஆட்பட்டவன் என்பதை நிரூபிக்க இத்தழும்பைத்தன் வயிற்றில் தரித்துள்ளான் என்கிறார் பராசரபட்டர்.

இவ்வாறு ஸ்ரீமந் நாராயணனின் பல உயர்குணங்களை வெளிப்படுத்தும் பன்னிரு நாமங்களும் வைணவர்களுக்கு மிகவும் முக்கியமானவை. வைணவர்கள் பன்னிரு திருமண்காப்பு அணிகின்றனர். ஒவ்வொரு திருமண்ணுக்கும் ஒரு திருநாமத்தைச் சொல்லியே அணிந்து கொள்வது இன்றுவரை மரபாக உள்ளது.

பரந்தாமனுக்கு இத்திருநாமங்கள் உகப்பானவை. நம்மாழ்வாரும், விஷ்ணுசித்தரான பெரியாழ்வாரும் பன்னிரு திருநாமங்களையும் பதிகங்களாகப் பாடியுள்ளனர். ஒரு பாசுரத்திற்கு ஒரு திருப்பெயர் வீதம் பன்னிரண்டு பாசுரங்களில் பன்னிரண்டு திருநாமங்களையும் மிக அழகாகப் போற்றியுள்ளனர். "கேசவன்தமர்...." என்று தொடங்கும் நம்மாழ்வார் பாசுரங்களை வாய்மணக்கப் பாடியதால்தான் ஸ்ரீவைஷ்ணவரானதாக எம்பார் என்ற ஆசார்யர் குறிப்பிடுவார். நாமும் இத்திருநாமங்களைத் தினமும் பாடிப் பரவி எம்பெருமானது திருவருளைப் பெறுவோம்.



(சென்ற இதழ்த்தொடர்ச்சி)

# யாதவாப்யுதயம்

திரு. எல். ஸ்ரீநிவாசன் - புதுடில்லி.

தான் தீட்டிய சித்திரத்தை மற்ற கலைஞர் கண்டு களித்தால்தான் ஓவியன் ஆனந்தமடைவான். ச்லோகத்தில் (श्रीमान्) என்னும் பதம். எம்பெருமானை விட்டு என்றும் பிரியாத சிறந்த ரஸிகையான மஹாலக்ஷ்மி அவனுடன் இருப்பதால், அவள் சித்திரத்தைக் கண்டு களித்து அவனுக்கு ஸ்ருஷ்டியில் ஊக்கமளிக்கிருள் என்பதை ஸூசிக்கிறது.

வ்ருத்தங்களில் மிகச்சிறியதான அநுஷ்டிப்பின் 32 அக்ஷரங்களுக்குள் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தின் முக்கியமான அடிப்படைக் கொள்கைகள் யாவற்றையுமமைத்திருப்பதால் ஸ்வாமியின் அபார ஸாமர்த்தியத்தைக் காட்டுகிறது. கடுகைக் குடைந்து கடலைப் புகுத்துவது என்னும் பழமொழிக்கு இது ஓர் சிறந்த எடுத்துக்காட்டு. வரட்டு வேதாந்தமாக இல்லாமல் இனிய பாடலாயிருப்பதால் இது மிகவும் ரஸிக்கும் படியாயுள்ளது. (ஸங்.ஸூ. 2-93)



ராதா கிருஷ்ண செப்புச் சிலை - ஈரோடு.
புகைப்படம்: கோவை' சீதாராம்.

## அப்பைய தீக்ஷிதரின் ஆனந்த பரவசம்

இவ்வர்த்தங்களையெல்லாம் மனதில் கொண்ட அப்பய்ய தீக்ஷிதர் இந்த ச்லோகத்திற்கு விஸ்தாரமாக உரை செய்த பிறகு, இதே போல் தேசிக னின் லலிதமான காவ்யங்களி லும் எங்கும் ஒவ்வோர் சப்தத் திலும் பல ரஸங்கள் பொதிந்து கிடக்கின்றன என்று புகழ்கிறார் அவர் நமது ஸ்வாமியைப் பெய ரால் குறிப்பதே கிடையாது கவிதார்க்கிக ஸிம்ஹம் போன் பிருதுகளைக் கொண்டே குறி பிடுகிருர். கவியிடம் அ ருக்கு அவ்வளவு எல்லை கடந் கௌரவம். முதல் ஸர்க்க தின் முடிவில் इति कविताार्किकसिंह अதாவது இவ்விதம் கவிதார் கிகஸிம்ஹமாகிய ஸ்ரீவேதாந் தேசிகனின் நூல்களில் யா வாப்யுதயத்தில் முதல் ஸர்க்க முற்றிற்று என்று கூறப்பட் ருப்பதற்குக்கூட தீக்ஷிதர் வெ விஸ்தாரமாக வ்யாக்கியான

செய்துள்ளார். இதைக் காட்டிலும் அவர் ஸ்ரீமான் தேசிகனிடம் வைத்திருந்த பஹுமானத்திற்கு ஓர் அத்தாக்ஷி அவசியமில்லை.

### காவ்யத்தின் சில முக்கிய அம்சங்கள்

இனி இந்த இனிய காவ்யத்தின் சில முக்கியமான சிறந்த அம்சங்களைக் காண்போம்.

காவ்ய விஷயத்தின் தனிப்பெருமை:- மற்ற காவ்யங்கள் க்ருஷ்ண சரிதத்தின் சிலபாகங்களை மட்டுமோ அல்லது வேறு விஷயங்களோடு கூட்டியோ சித்தரிக்கின்றன. ஆனால் யாதவாப்யுதயம் மட்டுமே கண்ணனின் சரிதையைத் தனியாகவும் முழுமையும் விவரிக்கும் பெருமை வாய்ந்தது.

### எங்கும் பரவிய பக்தி:

காவ்யம் முழுவதும் பக்தி ரஸம் நிரம்பியதாக உள்ளது. பக்தர்களுக்கு இது ஓர் ஸ்தோத்ர பண்டாரம் எனலாம். இதில் ஸ்ரீகிருஷ்ணனின் மேல் தேவர்கள், வஸுதேவர், அக்ரூரர், ஜாம்பவான், இந்திரன், நாரதர், சிவன் முதலானோர் செய்துள்ள தோத்திரங்கள் ஆங்காங்கு உள்ளன. கம்பன் தனது ராமாயணத்தில் ஸ்ரீராமனின் பரத்வத்தை அடிக்கடி உரைப்பது போல், ஸ்வாமி தேசிகனும் இங்கு ஸ்ரீகிருஷ்ணன் பரமாத்மா என்பதைத் திரும்பத் திரும்ப எடுத்துரைக்கிறார்.

### ஸுலப வேதாந்த ஜ்ஞானம்:

கண்ணனின் முகத்தில் வேத மணம் கமழ்கிறது என்று கவி அடிக்கடி உரைக்கிறார். (3-28, 4-17) அதே திவ்ய வாஸனை இந்த உத்தம காவ்யத்தில் திகழ்வதை நாம் காணலாம். பல இடங்களில் வேதத்தில் கூறப்பட்ட யஜ்ஞங்களையும் (3- 46, 20-66, 22-11), வேதமந்திரங்களையும் (13-83, 13-90) குறிப்பதைத் தவிர, கடின வேதாந்த பாகங்களின் ஜ்ஞானத்தை நமக்கு எளிதாகப் புகட்டும் ஸ்வாமியின் திறமை நம்மை மிகவும் கவர்கிறது. இரண்டு உதாரணங்களைக் காண்போம்.

(1) ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் பெயர் பெற்ற "நேதி, நேதி" என்ற வாக்யத்துக்குப் புதிதாகவும் எளிதாகவுமுள்ள ஓர் ஆழ்பொருளை 1-55ல் கவி அருளியுள்ளார். அதாவது உலகத்திலுள்ள எல்லா சேதநா சேதநங்களும் பகவானுக்கு எதிர் மறை உபமானங்கள். ஏனெனில் அவை பகவானைவிட வேறுபட்டவை. அவை காலம், தேசம், வஸ்து என்று மூன்றின் அளவுக்கு உட்பட்டவை; பகவான் அவ்விதம் அளவு படாதவன்.

(2) தைத்திரீய உபநிஷத்தில் (2-7) यतो वाचो निवर्तन्तोषे अप्राप्य मनसा सह என்ற மற்றோர் பிரஸித்தி பெற்ற வாக்யமுள்ளது. அத்வைதிகள் 'ப்ரஹ்மம் உண்மையிலேயே மனத்திற்கும் வாக்குக்கும் எட்டாதது, அதை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது. எனெனில் அதற்குக் குணங்களோ, விசேஷணங்களோ கிடையாது. அது நிர்குணம், நிர்விசேஷம்;' என்று இதன் பொருள் கூறுகின்றனர். இந்த வாக்யத்திலுள்ள அருமையான ஹாஸ்யத்தை அவர்கள் உணரவில்லை. முயலும் ஆமையும் ஓட்டப்பந்தயத்தில் சென்றது போல் மனதும் வாக்கும் பகவானின் குணங்களின் எல்லையைக் காணும் போட்டியில் இழிந்தனவாம். வாக்கு ஆமை போன்றது. மனம் முயல் போல் மிக்க வேகமுள்ளது. வாக்கு மிகவும் பின்னாடியிருக்கும் போதே மனம் திரும்பி வருவதை அது கண்டது. "முடிவைக் கண்டாயோ?" என்று அது கேட்டதற்கு மனது தன்னால் காண முடியவில்லை என்று தனது தோல்வியை ஒப்புக் கொண்டது. தோல்வியில் ஸமமாய் இரு தோழர்களும் கைகோர்த்துக் கொண்டு கிளம்பின இடத்திற்கே திரும்பி வருகிறுர்களாம்! உபநிஷத் இவ்விதம் அழகாகச் சித்தரிக்கிறது. இந்தச் சிறந்த ஹாஸ்யத்தை இழந்ததுமன்றி உண்மைப் பொருளையும் அத்வைதிகள் நழுவ விட்டனர். நமது ஸ்வாமி தேசிகன் இதன் சரியான தாத்பர்யத்தை 1-46ல் நயம்பட விளக்கியுள்ளார். அளவு கடந்த தூரத்தைக் கடக்க முயலும் ப்ரயாணிகள் போல் உள்ளனவாம் வேதங்கள். அநாதி காலமாக அவை பகவானின் அநந்த கல்யாண குணங்களை வர்ணிக்க முயன்று, ஆனந்தம் என்ற ஒரு குணத்தின் முடிவையும் காணப் பெறுமல் வெட்கமுற்று மற்ற குணங்களின் அருகில் கூடச் செல்ல வில்லை. வேதாந்த தேசிகன் இங்கு ஸ்தோத்ர ரத்னத்தை (19)ல் பின்பற்றுகிறுர். இதே விஷயம் மேலே 9-68லுமுள்ளது. ஆக, உபநிஷத்தின் அபிப்ராயம் ப்ரஹ்மம் வர்ணனைக்குட்பட்டதன்று. குணமற்றது என்பதல்ல; ஒருவராலும் அதை முழுமையும் வர்ணிக்க முடியாது என்பது மட்டுமே. ஆகவே அதை நினைப்பதற்கேயரியது என்று கூறப்பட்டது. (1-2, 1-46ம் காண்க.)

**தத்வ விவேசனம்:**

ஸ்ரீக்ருஷ்ண சரிதையில் சில ஸம்பவங்களை அனேகர் தவ ருகப் புரிந்து கொள்கின்ற னர். அவற்றின் உட்பொருள்—கண்ணனின் லீலைகள், வஸ்த்ராபஹரணம் முதலியவற்றின் களை ஸ்வாமி தேசிகன் வியக்கும் விதத்தில் விளக்குகிருர். 4-47, 4-64, 4-97, 8-67 போன்ற ச்லோகங்களில் கோபிகளுடன் ராபஹரணம் முதலியவற்றின் உட்பொருள்களை அருளியுள்ளார். ஸ்ரீமத் பாகவதத்திலும் (10-33-27, 28, 29) பாமரர்க்குண்டாகும் ஐயங்களை பரீக்ஷித்தே சுகரிடம் கேட்கிருன். ராஸக்ரீடையை எவ்விதம் சரி என்று கூறமுடியுமென்று வினவுகிருன். ஸ்ரீசுகர் ஒரு விதமாக பதிலளித்துள்ளார். (பாக.10-33-30 முதல் 40 வரை). ஸ்வாமி தேசிகனின் பதில்கள் அதை விட த்ருப்தி கரமாக உள்ளன. முக்கியமாக 4-64க்கு தீக்ஷிதர் பாத்ம புராணம் முதலிய ப்ரமாணங்களை எடுத்து விளக்கம் கூறியிருப்பது கவனிக்கத்தக்கது. காளிங்க நர்த்தனத்தின் மர்மமும் அவ்விதமே 4-119ல் விளக்கப்பட்டுள்ளது.

## வைதார்க்கும் வரமளிப்பான்!

கருமத்தால் யோகத்தால் பக்தி தன்னால்
ஞானத்தால் பதம்பெற்ருர் பலபே ருண்டு;
பரந்தாமன் நாமசங் கீர்த்த னத்தால்
பவமென்னும் பவ்வத்தைக் கடந்தா ருண்டு;
சிரத்தையின்றித் தற்செயலாய் மகனுக் கிட்ட
தெய்வப்பேர் சாற்றியதால் உய்ந்தோ ருண்டு;
கறுவியே வைததனால் கமலக் கண்ணன்
கழலடிகள் சேர்ந்தாரும் சிலபே ருண்டு!

பாவிமகன் துரியனவன் பக்கல் சார்ந்து
பரிபவத்தைப் பட்டழிந்த கன்னன் தானும்
தூயமகன் தொல்லாழிப் படையோன் தன்னைத்
துச்சமென மதித்திட்டுத் தூற்ற லுற்ருன்;
கோவியரின் நவநீதம் கொள்ளும் கள்வன்
கோவேந்தர் நீதியெலாம் அறியா னென்ருன்;
ஆவியதை இழக்கின்ற தருணந் தன்னில்
அளித்திட்ட கொடைக்காக அருளப் பெற்ருன்!

உடன் பிறந்தாள் வயிற்றுதித்த சிசுவா லேதன்
உயிர்போகும் என்றறிந்த கஞ்சன் நாட்டில்
உடன்பிறந்த குழந்தைகளை ஒழிக்க லானான்;
உயிர் பிழைத்த ஓர் குழவி கண்ணன் தானும்
அடைமழையில் நந்தகோன் அணைப்பில் வாழ்ந்தே
அடுக்கடுக்காய் ஏசிட்ட அம்மான் தன்னை
அடலேறுய்ச் சாய்த்திட்டான்; அன்பா லன்றி
அச்சத்தால் அச்சுதனின் அடிகள் சார்ந்தான்!

துறவியரும் மன்னர்களும் சூழ்ந்து காண
இராசசூய வேள்வியினைத் தருமன் செய்தான்;
அறிவறிந்த சகதேவன் கூற்றிற் கேற்ப
அச்சுதற்கு முதற்பூசை அளிக்கக் கண்டு
கறவைகளை மேய்க்கின்ற கள்வன், ஆய்ச்சி
கனதனங்கள் தழுவுகின்ற காமன், நாளும்
இரப்போரும் பித்தர்களும் ஏத்தும் மாயன்
என்றிகழ்ந்த சிசுபாலன் வீடு பெற்ருன்!

திரு. ச. கருப்பையா - இராமநாதபுரம்

**வர்ணனைகள்:**

கவி தமது கல்பனா சக்தியின் முழுத் திறமையையும் உபயோகித்து அனேக வர்ணனைகளை நிறுவியுள்ளார். அவற்றைப் பின் வருமாறு பிரிக்கலாம்.

(1) இயற்கை - ருதுக்களின் வர்ணனை, ஸூர்யாஸ்தமனம், சந்திரோதயம், இரவு, இந்திரனின் உத்யான வர்ணனை, கல்மழை, கேசி, ஐராவதம், கருடன் முதலியவற்றின் சித்திரங்கள்.

(2) இடங்கள் - தேசத்தின் பல்வேறு பாகங்கள், த்வாரகை ஆகியவற்றின் வர்ணனைகள்.

(3) யுத்தங்கள் - ஜாம்பவான், சிசுபாலன், நரகாசுரன், இந்திரன், பாணன், பௌண்ட்ர வாஸுதேவன் ஆகியோருடன் க்ருஷ்ணனின் யுத்தங்கள்; ஸாத்யகியின் திக்விஜயம்.

(4) அழகு, உணர்ச்சிகள் - ருக்மிணியின் ரூப லாவண்

யம், க்ருஷ்ணனும் ருக்மிணியும் த்வாரகை ப்ரவேசிக்கும் போது ஓடிவந்த ஸ்தீரிகளின் வர்ணனை, ராஸக்ரீடை, கோபிகைகளின் விலாபம், அக்ரூரரின் எண்ணங்கள், க்ருஷ்ணன் பத்னிகளுடன் ரமித்தல்.

(5) மற்றவை - தேவகியின் திவ்ய கர்ப்பம், கண்ணன் காட்டிலிருந்து திரும்பி வரும் அழகு, குழலூதுதல், கோவர்த்தனோத்தாரணம், ருக்மிணீ பரிணயம், பலராமன் கிருஷ்ணன் மதுரை ப்ரவேசம் முதலியன.

ருதுக்களின் வர்ணனையும், அஸ்தமனம் முதல் இரவு சிறிது சிறிதாக அதிகமாவதையும் வர்ணித்திருப்பது கவி இயற்கையை கூர்ந்து கவனித்தவர் என்பதை நன்கு விளக்கும். உணர்ச்சிகளில் சித்தரிப்பதில் இவருக்கு ஸமமில்லை என்றே கூறலாம். வர்ணிக்கப்படும் வஸ்து எதுவாயிருந்தாலும் - ஐராவதமோ அல்லது கருடனோ, கம்ஸனோ அல்லது கண்ணனோ, த்வாரகையோ அல்லது ஸ்வர்க்கமோ - அதில் ஸ்வாமியின் மனம் வேறுபாடின்றி லயிக்கிறது. மழையில் கோபஸ்த்ரீகள் பட்ட அவதி தத்ரூபமாக வர்ணிக்கப்பட்டுள்ளது.

## முக்ய ரஸங்கள்:

ஏற்கனவே கூறியபடி காவ்யத்தின் முக்ய ரஸங்கள் மூன்று ச்ருங்காரம், வீரம், அத்புதம்.

(1) ச்ருங்காரம. வேதாந்த தேசிகன் கேவலம் வேதாப்யாஸ ஜடர் அல்ல என்பது அவரது ச்ருங்கார வர்ணனைகளிலிருந்து தெளியலாம். த்வாரகையில் எல்லா மாளிகைகளிலும் ரத்ன தீபங்கள் உள்ளன. இரவில் தமது கணவர்கள் காமாதுரர்களாய் தங்களது துகிலை உரியும் போது அங்குள்ள ஸ்த்ரீகள் வெட்கத்தினால் விளக்குகளை அணைக்க முயன்றும் பயன்படவில்லை. அவை ரத்ன தீபங்களாகையால் அவற்றை அணைக்க முடியவில்லை. ஆகவே அவர்கள் தங்கள் முயற்சியைக் கைவிட்டுப் பேசாமலிருக்க வேண்டியிருந்தது என்று 11-47ல் வர்ணிக்கிறார். கண்ணன் தனது மஹிஷிகளுடன் எண்ணிறந்த வழிகளில் களித்ததை 21ம் ஸர்க்கம் விரிவாக்கூறுகிறது. இது ஓர் இரண்டாவது காம சாஸ்திரமோ என்று ஐயுறும்படி உள்ளன வர்ணனைகள். (சுலோ 39, 40, 66) ஆயினும் இது தர்மத்திற்கு விரோதமில்லாத காமம் என்பதை அடிக்கடி வற்புறுத்தி, அதை, உயர்த்த, தகுந்த ஸ்தானத்திலேயே அமர்த்தியுள்ள பெருமை கவியைச் சாரும். (83, 91) கண்ணன் கீதையில் (7-11) அருளியதைத் தானே அநுஷ்டித்துக் காண்பித்தான் என்பது கவியின் திருவுள்ளம். சிருங்காரம் நிறைந்திருந்த போதிலும் அது கேவலம் ப்ராக்ருதமாக இல்லை. த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் (3) ஸ்வாமி தேசிகன் நம்மாழ்வாரின் பக்தி, அதன்மிகுதியால் ச்ருங்காரமாக பரிணமித்தது என்று அருளினார். யாதவாப்யுதயத்தில் ச்ருங்காரத்தையே பக்தியாக மாற்றிவிட்டார். (24-23). ஆழ்வார்கள் தங்களை நாயகிகளாக பாவித்துக் கொண்டு தங்கள் பக்தியை ச்ருங்கார ரூபமாக பகவானுக்கு அர்ப்பித்தனர். ஸ்வாமி தேசிகன் பகவானை ஓர் தேவியாக ஆக்கித்தொழுகிறார். (15-89) அந்த ச்லோகத்தில் கண்ணனுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அடைமொழிகளெல்லாம் ஸ்திரீ லிங்கமே. ஸ்திரீலோலனான கண்ணனுக்கு, மோஹினி ரூபம் எடுத்து சிவனையும் மயங்கச்செய்த பகவானுக்கு, தன்னை ஸ்திரியாகவே வர்ணிப்பது பிடித்தமே போலும்!

(2) வீரம் - இந்த ரஸம் பல யுத்தங்களை வர்ணிப்பதிலும் திக் விஷயத்திலும் விரிவாகக் கையாளப்பட்டுள்ளது.

(3) அத்புதம்: கோவர்த்தனோத்தாரணம், காளியமர்த்தனம், கண்ணன் குழந்தையாகவே பல அசுரர்களை மாய்த்தல் ஆகிய இடங்களில் இந்த ரஸம் அருமையாக அமைக்கப்பட்டுள்ளது. தவிரவும், எதிர்ப்பாராத இடங்களில் இந்த ரஸத்தை கையாண்டிருப்பதும் ஓர் அத்புதம். உதாரணமாக 2-22ல் தேவகியின் வயிற்றில் கண்ணன் இருந்தான். அவன் வயிற்றில் உலகங்களெல்லாம் இருந்தன. அந்த உலகத்திற்குள் தேவகியுமிருந்தாள் என்கிறார். ஈதென்ன அத்புதம்! அதே போல் ஜாம்பவான் க்ருஷ்ணனை இவ்விதம் தோத்திரம் செய்கிறார். "உலகம் உமக்கு உள்ளும் வெளியுமுள்ளன. நீரும் அதற்கு உள்ளும் வெளியும் உள்ளீர். இதைக் காட்டிலும் வேறு அத்புதம் உண்டோ!"

மற்ற ரஸங்களும் ஆங்காங்கு தகுந்தபடி இடம் பெறுகின்றன. ஹாஸ்யத்துக்கு உதாஹரணம்! பெருமையடித்துக் கொண்ட பூதகணங்கள் பாணாஸுர யுத்தத்தில் பறந்து ஓடியதும் பசுபதி அவை வெறும் பசுக்களே என்று உணர்ந்தார்

என்று கூறுகிறார் (20-30). சக்ராயுதம் காசியைச் சாம்ப லாக்கி சம்புவுக்கு உடலில் பூசிக் கொள்ள சாம்பலுக்குக் குறை வில்லாமல் செய்தது என்கிறார் 21-42ல்.

### நினைவூட்டும் சக்தி:

ஒரு பதம் அல்லது சொற் றொடர் முதல் பேதம் முத லான பல உயர்ந்த நூல் களின் மேம்பட்ட கருத்துக்க ளைக் கலைஞர்களுக்கு ஞாபக மூட்டுவது ஸ்வாமி தேசிகனின் அபார சக்தியாகும். சில உதா ஹரணங்கள் கீழே கொடுக்கப்ப டுகின்றன.

| ச்லோகம் | நினைவுறும் நூல் |
|---|---|
| 17-95 | கேனோபநிஷத் |
| 17-94 | ப்ரஹ்மஸூத்ரம் 3-3-31 |
| 2-62 | கீதை 17-16 |
| 7-77 | ராமாயணம் கிஷ் 28-29 |
| 8-37 | ராமாயணம் கிஷ் 28-37 |
| 9-89 | பாகவதம் 10-31-2 |
| 8-77 | பாகவதம் 10-32-2 |

### ஆழ்வார்கள் ஆசார்யர்களை அடியொற்றுதல்

ஆழ்வார் ஆச்சார்யர்களைப் பின்பற்றுவதில் ஸ்வாமி தேசி கனுக்குள்ள ஆர்வத்தை ப்ரதி வாதி பயங்கரம் அண்ணன் ஸப் ததி ரத்நமாலிகையில் (ச்லோ 30) கொண்டாடி ஆச்சர்யப்படு கிறார். அந்த அவரது சக்தியை இந்த காவ்யத்திலும் பல இடங் களில் காணலாம். உதாஹரண மாக 7ம் ஸர்க்கத்தில் கோவர்த் தனோத்தாரணம் பெரியாழ்வார் திருமொழி 3-5ஐப் பல இடங் களில் பின்பற்றுகிறது. கண் ணன் குழலூதும் வர்ணனை யும் அவ்விதமே. 4-34 கண்ணி நுண் சிறுத்தாம்பை (பாசுரம் 1) நினைவுறுத்தும். 5-96 திருப்பா வையில் (26) "மேலையார்செய் வனகள்" என்பதைக் காட் டும். 12-93 திருவிருத்தம் 56, 27 ஆகிய பாசுரங்களை உட் கொண்டது. ஸ்தோத்ர ரத் னம் (42), கீதார்த்த ஸங்ஹ ரகம் (5), ஸ்ரீகுணரத்நகோசம் (4) ஆகியவற்றை 1- 73, 23-26, 18-103 முறையே தழுவுகின்றன. 5-51ல் கண்ணன் யாமுநீயர்க ளிடம் ப்ரியமுள்ளவனென்று அருள்கிறார். அதாவது யமு னையின் தீர்த்தம், யமுநாசார் யர் என்ற ஆளவந்தாரின் ஸ்ரீஸூக்திகள் அல்லது சிஷ் யர்கள் ஆகியவற்றிடம் ப்ரீதி அதிகமுள்ளவன் கண்ணன் என்றபடி. (யதிராஜ ஸப்ததி லும் காண்க.) ஸ்வாமி தேசி கன் உபயவேதாந்தசாரியரா கையால் தமிழ் வேதத்துடன் உள்ள தொடர்பை இங்குக் கவ னிப்பது முக்யமாகிறது. இது அப்பைய தீக்ஷிதரின் வ்யாக் யானத்தில் இல்லாதது ஓர் குறையே.

### மற்ற கவிகளின் வாக்கை விஞ்சுதல்

எழுத்தாளரகள் மற்ற கவி களிடமிருந்து கருத்துக்களைக் கடன் வாங்குவதுண்டு. அதற் குத் தடையுமில்லை. ஆயி னும் வேதாந்ததேசிகன் வேறு கவி- வர்ணித்த ஸந்தர்ப்பங்க ளையே தாமும் வர்ணிக்கும் போது தமது மேதா விலாஸத் தால். அவர்களை எப்போதும் ஓர் படி அதிசயித்தே இருப் பார். உதாஹரணமாக காளிதா ஸன் குமாரஸம்பவத்தில் பார் வதியின் துடைகளை வர் ணிக்கும் போது, கவிமரபிற் கிணங்க, அவை யானையின் துதிக்கையை ஒத்தனவோ என் றான். ஸ்வாமி தேசிகன் ருக்மிணி விஷயத்தில் அந் தக் கேள்வியே எழாது என்றார் (12-54). அதே போல் கல் யாணத்தில் லாஜ ஹோமத்தை வர்ணிக்கும் போது காளிதா ஸன் புகையினால் சிவன் பார்வதிகள் கண்களைக் கசக்கிக் கொண்டார்கள் என்று மிகச்சா தாரமாகக் கூறிப் போந்தான். ஸ்வாமிதேசிகன் அதே கட்டத் தில் திவ்ய தம்பதிகள் கண்ண னும் ருக்மினியும், மற்றவர்கள் புகையால் கண்ணைக் கசக்கிக் கொள்ளும் போது, தாங்கள் ஒரு வரை ஒருவர் கடைக்கண்களால் பார்த்துக் கொண்டனர் என்று அழகாக வர்ணித்தார் (13-86).

### சுருங்க உரைத்தல்:

ஸாரமான விஷயங்களைச் சுருங்க உரைத்து விளக்குவ தில் தேசிகனுக்கு நிகரில்லை. இதற்கு ஓர் உதாஹரணமே போதும். 3-19ல் உலகிலுள்ள சராசரங்கள் யாவும் எம்பெருமா னையே ஆதாரமாகக் கொண் டன. ஸகல சாஸ்திரங்களும் இந்த அடிப்படையான முக்யத் துவத்தின் விளக்கங்களே என்று அருளியுள்ளார். இது அச்யுத சதகம் 15ம் ச்லோகத்தை ஒரு புடை ஒத்திருக்கும்.

### பாரத தரிசனம்:

தேசத்தின் வெவ்வேறு பாகங் களைப் பற்றிய ஆழ்ந்த ஜ்ஞா னம் ஸ்வாமிக்கு இருந்தது ஆச் சரியம். அக்காலத்தில் போக்கு வரத்து வசதிகள் மிகக் குறை வாக இருந்தன. துருஷ்கர்க ளின் ஆக்ரமிப்பு வேறு இருந் தது. அப்படி இருந்தும் நுணுச் கமாக ஸகல ப்ரதேசங்களையும் இவர் அறிந்திருந்தது வியப்பே ஆங்காங்குக் கிடைக்கும் விசே ஷப்பொருள்கள் மக்களின் விசே ஷப் பழக்கவழக்கங்கள், அவர் களின் கலைத்திறன் முதலிய வற்றை வர்ணித்துள்ளார். உதா

ணமாக, சந்தனமும் ஏலக்கா
மேற்கு மலைத்தொடரில்
_க்கின்றன (22-194 முதல்
வரை) காஷ்மீரத்தில் கேஸ
நேபாளத்தில் கஸ்தூர
கிடைக்கின்றன என்று
க்கிறார். (22-123, 128).
ளத்தில் ஸ்திரீகள் விசித்தி
கக் கொண்டை போட்டுக்
ள்கிறார்கள் (22-202), காஷ்மீ
ல் குளிர் அதிகமாகையால்
சிறிய மண்பாண்டத்தைத்
லுடன் கழுத்தில் தொங்க
டுக் கொள்கின்றனர் (24-39)
றும் குறிப்பிடுகிறார். இந்தப்
கங்கள் இன்றும் அந்தப் ப்ர
ங்களில் உள்ளன. ஆந்திர
த்து ஸ்திரீகளின் ஸங்கீத
ஞத்தையும் 22-100ல் காட்டி
ளார். கர்நாடக ஸங்கீதத்
தமக்குள்ள ஜ்ஞானத்தையும்
ல் காண்பிக்கிறார். இவ்
ணனைகள் அக்காலத்தில்
வேறு ப்ரதேசங்களிலிருந்த
லமைகளை கைநிலைக் கண்
போல் காட்டித் தருகின்

## க்கிய அருமைகள்

த்யங்களில் பல்வேறு வ்ருத்
களையும் அலங்காரங்களை
கையாள்வதில் ஸ்வாமி
ஸமர்த்தர். 8-105,
போன்ற ஸ்லோகங்கள்
கம்பீரமானவை. மற்றும்
ச்லோகங்கள் பாகவதத்
குத் தோள்தீண்டிகள். இனி
யும் எளியநடையும் இவரு
ய கைலியின் விசேஷங்
காதுக்கு மதுரமாகவும்
த்த கர்ப்பமுள்ளவை ச்லோ
கள் வேதாந்தமும் ஸாஹித்
ம் இவரிடம் கைகோத்து
வுகின்றன. இயற்கை
எல்லா ப்ரகாரங்க
அழகாகக் கண்முன் நிற்
போல் சித்தரிக்கின்றன.



ஸ்ரீ அர்த்த நாரீஸ்வரர் திருக்கோயில்
ரிஷிவந்தனம்.

சித்ர ஸர்க்கத்தில் அதிச யிக்கத்தக்க ஆச்சர்ய கவனங் களைச் செய்துள்ளார். தேவ கியின் வர்ணனையில் கவித் வத்தின் உச்ச கோடியை எட் டிப் பிடிக்கிறார். இடத்துக்குத் தகுந்த பதம், வ்ருத்தம், உவமை முதலியவற்றைத் தேர்ந்தெடுப்ப தில் ஓர் அலாதியான ஸாமர்த் யம். காளியமர்த்தனத்தில் அபூர்வமான அச்வதாட்டி வ்ருத் தத்தில் அமைந்துள்ள ச்லோகம் (4-124) கண்ணனுக்குச் சரியாக நம்மையும் அசைந்து தாளத்து டன் நர்த்தனம் ஆடும்படி செய் வது போல் அமைந்துள்ளது.

## உவமைகளும் ரூபகங்களும்

ஸமுத்திரத்தில் அஸ்தமிக்கும் ஸூர்யனின் கிரணங்கள், தண் ணீரில் மூழ்குபவன் தன் னைக் காப்பாற்றும் பொருட் டுக் கைகளை வெளியே நீட டுவது போலிருந்தது (2-40) என்ற உவமை அபூர்வ கல் பனை. அதே போல் இருட்டா கிக் கொண்டுவரும் இரவு, கருப் புடையணிந்து தனது காதல னான சந்திரனை உதயகாலத் தில் முன்னேற்பாட்டின்படி சந் திப்பது போலிருந்தது (2-49) என்பதும் கல்பனா சக்தியின் ஆழ்மையைக் காட்டும். 1-19, 1-30ல் பல உவமைகளை மாலை போல் தொடுத்துள்ளார்.

ஸத்துக்களின் ஹ்ருதயம் நிர் மலமான நதிநீரைப் போன் றது என்று எந்தக் கவியும் சுலபமாகச் சொல்லிவிடலாம். ஆனால், தமஸாநதியின் அழுக் கற்ற ஜலம் ஸத்துக்களின் களங் கமற்ற மனதைப் போலிருந் தது என்று சொல்வதற்கு ஒரு வால்மீகி தேவை (பால. 2-5) உயர்ந்த வஸ்துவுடன் ஒப்பிடு வதே முறை என்பது வால் மீகியின் கருத்து. நாச்சியார் திருமொழியில் (14-6) எம்பெரு மான் புருவத்தை அவனுடைய சாரங்க வில்லுக்கே ஒப்பி டுகிறாள் ஆண்டாள். ஏனெ

னால் (1) ஒப்பிடத் தகுந்த வேறு உயர்ந்த வஸ்து இல்லை. (2) ஒப்பிட்டாலும் அது பகவானைச் சேர்ந்த வஸ்துவுடனேயே இருக்க வேண்டும். ஸ்வாமி தேசிகனும் அதேபோல் அஸ்தமனத்தை விஷ்ணுவுடனும் (2-38), சந்திரனை வாமனனுடனும் (2-64), கமலத்தை த்ரிவிக்கிரமனுடனும் (5-61) ஒப்பிடுகிறுர். ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் (5-3-2) தேவகியைப் பூர்வ ஸந்த்யையுடன் ஒப்பிட்டுள்ளதை மாற்றி வேதாந்த தேசிகன் பூர்வ ஸந்த்யையை தேவகியுடன் ஒப்பிட்டுள்ளதும் (2-51) கவனிக்கத்தக்கது. இந்த இடங்களில் நாம் காண்பதாவன: (1) வால்மீகியைப் போல் உயர்ந்த பொருள்களுடன் ஒப்பிடுதல், (2) ஆண்டாளைப் போல், பகவானை அவருடைய விபூதியுடன் ஒப்பிடுவதை விட்டுவிட்டு, பகவானுடைய விபூதியை அவருடன் ஒப்பிடுதல்.

இயற்கை வர்ணனையிலும் தத்வங்களை இணைப்பதிலும் ஸ்வாமி தேசிகன் ஸமர்த்தர். பொழுது புலர்வதை வேதாந்த ஜ்ஞான உதயத்துடன் ஒப்பிடுகிறுர். (19-52) யமுனையை வஸுதேவர் கடந்ததை யோகி ஸம்ஸாரத்தைத் தாண்டுவதுடன் ஒப்பிடுகிறுர் (3-41). ஸாதாரண இயற்கை உவமைகளுமுண்டு. கம்ஸனின் மந்திரிகளிடமிருந்து உக்ரஸேனன் விடுபட்டது, ஸூர்யன் மேகங்களிலிருந்து வெளிவந்தது போலிருந்தது என்று 10-111ல் அருளியுள்ளார்.

சிறந்த ரூபகங்களும் ஆங்காங்கு காணப்படுகின்றன. பாணன் (பாணஸுரன்) யுத்தகளத்தில் ஓர் பாணமாகவே (அஸ்த்ரம் போல்) நுழைந்தான் (20-69), யதுவம்ச கிளை கொண்ட ஓர் மரம் (1-26) போன்ற இடங்களில் இவற்றைக் காணலாம்.

## சிலேடை:

பதங்களுக்கு ஈரர்த்தங்கள் கொடுத்து உபயோகித்தல் சிலேடையாகும். இவ்வித உபயோகத்தில் கைதேர்ந்த நமது கவி அதை வேறு விதமாகவும் உபயோகித்துள்ளார். உதாஹரணமாக, அக்னியின் விசேஷணங்களை விஷ்ணுவுக்கு உபயோகப்படுத்தி அதிலிருந்தே விஷ்ணு உயர்ந்தவர் என்று நிரூபிக்கிறுர் (1-43). ஒரே சொற்றெடரை எதிரான பொருளைக் கொடுக்கும் படியும் அமைத்துள்ளார். உதாஹரணமாக, பௌண்ட்ர வாஸுதேவனின் தூதனின் பேச்சும் (21-11) அதற்குக் கண்ணனின் பதிலும் (21-24 முதல் 27 வரை ) இவ்விதம் உள்ளன. 8-47ல் ராகம் என்ற சொல் சங்கீதம், அநுராகம் என்ற இரண்டு பொருள்களை உட்கொண்டது. திருவாய்மொழி 9-9-9ல் போல; அதன் மூலம் அந்த ச்லோகத்தில் கூறப்படும் இரண்டாவது வேதம் திருவாய்மொழி என்று ஸூசிதமாகிறது.

## அலங்காரங்கள்:

பத்யங்களை அலங்காரங்களால் பலவிதமாக அழகு செய்வர் கவிகள். தேசிகன் இந்த மஹா காவ்யத்தில் எல்லாவித அலங்காரங்களையும் கையாண்டுள்ளார். தீக்ஷிதர் ஒவ்வொர் ச்லோகத்திலும் அவற்றை எடுத்துக் காட்டியது மல்லாமல் தமது அலங்கார சாஸ்திர நூலாகிய குவலயானந்தத்தில் யாதவாப்யுதயத்திலிருந்து உதாஹரணங்களை

## சித்ர ஸர்க்கம்:

ஆரும் ஸர்க்கத்தில் பலவித சித்ரங்களை உண்டாக்கும் ச்லோகங்களைக் கவனம் செய்து அதில் தமக்குள்ள அஸாதாரண ஸாமர்த்யத்தை வேதாந்த தேசிகன் வெளிப்படுத்தியுள்ளார். அவர் செய்திருக்கும் சித்ரங்களின் சில உதாஹரணங்களைக் கீழே காண்போம்.

(1) பிந்துமதி (47): ச்லோகத்தில் ஒருபதத்தில் ஒரு பிந்துவைச் சேர்த்தால் அர்த்தம் மாறுதல். அதாவது ससार என்ற பதத்தில் புள்ளியைச் சேர்த்து संसार என்று ஆக்கினால் வேறு பொருள் கிடைக்கிறது.

(2) ப்ரஹேலிகா புதிர் (48): பதங்களின் அமைப்பை ஊன்றிக் கவனிக்காவிட்டால் புரியாமல் புதிர் போல் தோன்றும்.

(3) கூடசித்ரம் (70): நான்காம் பாதத்திலுள்ள அக்ஷரங்கள் முதல் மூன்று பாதங்களில் கூடமாயிருத்தல் (மறைந்திருத்தல்)

(4) ஸ்லோகங்களில் அல்லது பாதங்களில்: 1. ஒன்று, இரண்டு அல்லது மூன்று எழுத்துக்களையே திரும்பத்திரும்ப அமைத்தல். 2. வல்லினம், மெல்லினம் முதலியவைகளை மட்டும் அமைத்தல்; 3. மேற்கண்ட இரண்டையும் விதம் விதமாகச் சேர்த்து அமைத்தல் (78 முதல் 96 வரை)

(5) யமகங்கள்: ஒரே அக்ஷரமோ அல்லது பதமோ வெவ்வேறு அர்த்தங்களில் ஒரே ச்லோகத்தில் அமைத்தல் யமகமாகும். இதில் பல்வேறு விதங்

களைக காணபித்துக் கடைசியில் மஹாயமகத்தில் (106, 107) முடிக்கிறார். அதில் நான்கு பாதங்களும் ஒரே மாதிரியாக இருந்தும் வெவ்வேறு பொருள்களைக் கொடுக்கும்.

(6) ஏக க்ரியான்வித ச்லோக வ்ருத்தி (77): வினைச் சொல் தவிர மற்றப் பதங்கள் இரண்டு அர்த்தங்களைக் கொடுத்தல். பதங்களை வெவ்வேறு விதமாகப் பிரிப்பதால் இது கிடைக்கிறது.

(7) அநுலோம ப்ரதிலோமம்: 1. முதல் பாதம் இரண்டாம் பாதத்தில் தலைகீழாகவும், மூன்றாம் பாதம் நான்காவதில் தலைகீழாகவும் அமைத்தல்(76). 2. முழுச்லோகத்தையே தலைகீழாகப் படித்தால் அது வேறு ச்லோகமாகி வேறு பொருள் கொடுத்தல் (98).

(8) சித்திரங்கள்: 1. கோமூத்ரிகா (65,66) முதல் பாதியிலும் இரண்டாம் பாதியிலுமுள்ள இரண்டாவது, நான்காவது முதலிய எழுத்துக்களை ஒன்றுக்கொன்றாக மாற்றினால் முதல் பாதி இரண்டாவதாகவும், இரண்டவது பாதி முதலாகவும் ஆகும். அதைச் சித்ரமாக வரைந்தால் பசு நடக்கும் போது மூத்ர விஸர்ஜனம் செய்தால் உண்டாகும் சித்ரம் கிடைப்பதால் இதற்கு இந்தப் பெயர்.

2. அஷ்டதளபத்மம்(105): எட்டுத்தளங்கள் கொண்ட தாமரை.

3. ஸர்வதோபத்ரம்: (100, 101) இதில் (a) நான்கு பாதங்களையும் நேர் வரிசையில் ஒன்றன் கீழ் ஒன்றாக எழுத வேண்டும்; (b) ச்லோகத்தைத் தலைகீழாக்கி அதன் நான்கு பாதங்களையும் நேர் வரிசையில் ஒன்றன் கீழ் ஒன்றாக முன் எழுதியவற்றின் கீழ் எழுத வேண்டும். அப்போது எட்டு அக்ஷரங்கள் கொண்ட எட்டு வரிசைகள் கிடைக்கும். அவற்றை இடம் வலமாகவோ, திருப்பியோ, மேலிருந்து கீழாகவோ, மாற்றியோ எப்படிப் படித்தாலும் ஒரே மாதிரியாயிருக்கும். ஒவ்வோர் வரிசையும் தலைகீழாய் வாசித்தாலும் மாறாமலிருப்பதே இதற்குக் காரணம்.

4. அர்த்த ப்ரமகம்: (102) மேற்கூறிய (a) (b) போல் செய்தால் அதே போல் சித்திரம் கிடைக்கும். இங்கு வரிசைகளைத் தலைகீழாகப் படித்தால் அவை வெவ்வேறாக இருந்த போதிலும் அதே சித்திரம் கிடைப்பது விசேஷம். (a) மட்டும் செய்தால் ஓர் நீண்ட சதுரம் கிடைக்கும். அதில் மேலிருந்து கீழாகவும், கீழிருந்து மேலாமாகவும் 1, 8, 2, 7, 3, 6 ஆகிய வரிசைகளை வாசிக்க முடியும்.

5. முரஜ பந்தம் (103) மத்தளத்துக்குக் கட்டிய முறுக்குக் கயிறு போன்ற சித்திரம்.

6. சக்ர பந்தம் (104) ஒன்றுக்குள் ஒன்றாக ஒன்பது சக்கரங்களும் அவற்றின் உள்ளே குறுக்கில் நடுவிலிருந்து இரு பக்கமும் செல்லும் ஆறு அச்சுக்களும் அமைந்துள்ள இந்த சித்ரத்தில் மூன்றாது, ஆறுவது சக்ரங்களில் ஸ்வாமியின் பெயரும் காவ்யத்தின் பெயரும் பொறிக்கப்பட்டிருக்கும் ஆச்சரியத்தைக் கொண்டது இந்த சித்திரம் (பாதுஹாஸகஸ்ரம் 941ம் காண்க).

பாதுகா ஸஹஸ்ரத்தின் சித்ரபத்ததியில் இன்னும் அனேக சித்திரங்களுள்ளன. அங்கு ஓர் ச்லோகத்திற்குள் மற்றோர் ச்லோகத்தை அமைத்து இதை விட வியக்கும்படி செய்துள்ளார்.

## முடிவுரை:

ஆதர்ச கவி இருக்க வேண்டிய முறையைத் தம் முன் வைத்து 1-5ல் ஸ்வாமி தேசிகன் அருளியிருப்பதாவது:

"எந்த ப்ரஹம்மாவின் முன் ஸரஸ்வதி தேவி அலங்காரங்களுடன் ச்ருங்காராதி ரஸங்களுடனும், முகபாவங்களுடனும் தன்னுடைய குணங்களாலும் ஆனந்தத்தை உண்டுபண்ணுகிறாளோ அவரே ஸ்ருஷ்டிப்பவராவார். சிலேடை மூலம் இதன் மற்றோர் பொருள்: எவருடைய ஸரஸ்வதி (வாக்கு) காவ்யாலங்காரங்கள், ச்ருங்காராதி ரஸங்கள், அர்த்த கர்ப்ப பாவங்கள் முதலிய அனேக குணங்களைக் கொண்டதாகத் தடையில்லாமல் நதியைப் போல் ப்ரவஹித்து வாசிப்போரை மகிழ்விக்கிறதோ, அவரே கல்பனா சக்தியுள்ள கவியாவார்."

கவிஸிம்ஹம் என்ற பிருது பெற்ற நமது வேதாந்த தேசிகன் யாதவாப்யுதயம் என்ற இந்த காவ்யரத்னத்தில் இவ்வித அற்புதக் கவியாகத் திகழ்கிறார் என்பதை நாம் மேலே குறித்துள்ள சிற்சில உதாஹரணங்களிலிருந்தும் எளிதாக அறியலாம். தீக்ஷிதரே இதற்கு ஸாக்ஷி. ★



# ஒப்புடன் காணபாய் உவந்து

நேரிசை வெண்பா

கவிஞர். சோமசுந்தரப்பெருமாள் - தங்கவயல்.

அன்பெனும் பிடிகொண்டு ஆசையினைக் கட்டவிழ்த்து
என்புள்ளும் ஏற்றுகின்ற எண்ணத்தால்-சீரான
பாதையினைக் காட்டி பரமனுடன் சேர்க்கும்
காதையினைக் கற்பது கடன்.

ஆகாத செயலொன்றும் அவனியில் இல்லையாம்
வேகாத பயிருண்டோ வினையினால்-கூழாகும்
நெஞ்சத்தை நிமலன்பால் நிறுத்தும் பேரினையும்
தஞ்சமென்று அடைதல் தலை.

இகமும் பரமும் இன்பத்தின் பகுதியென
அகமதில் கண்டோர் ஆறுதலை-நேரான
பந்தமெனக் கண்டு பற்றும் எல்லையை
சொந்தமெனச் சொல்வார்க்கு சுகம்.

ஈன்ற பொழுதும் இங்கென்றும் உளபோதும்
ஊன்றிய துணையும் உற்றவனும்-பாங்கான
காத்திடும் கருணைக் கண்ணன் தாளிணைகள்
சேர்ந்திட்ட உயிர்க்கு சேரும்.

உடைத்த செல்வமும் உரிமையும் உம்மால்
அடைந்த தென்னல் அறியாமை-நிலையான
வேங்கடனை வேண்டிடும் வேளையெல்லாம் நல்ல
தாங்கிடம் காணல் தகும்.

ஊருக்கு நீராய் உற்றவர்க்கு துணையாய்
பேருக்கு பெற்றிடலே பேரின்பம்-மாலவன்
காலுக்கு அணியாகி கடைத்தேறும் நிலையும்
ஆளுக்கு ஒப்பாதல் அழகு.

எண்ணியும் எழுத்தும் எடுத்தும் என்றும்
உண்ணிய கருமம் உவத்தல்-சாரங்கன்
கண்ணின் வழியெனக் கண்டு காதலால்
பண்ணும் பக்தியே பாங்கு.

ஏற்றம் இப்பிறப்பில் எளிதாய் இறைவனை
மாற்றமிலா நெஞ்சுடன் மாசகற்றி-நாரணன்
காட்டும் பாதையினைக் கண்டு சேருதலே
வாட்டும் துயருக்கு வழியாகும்.

ஐயமில்லை அரங்கனின் அருள் பெற்றூர்க்கு
பயமில்லை பரமனுடன் கலந்தார்-கண்ணன்
கழலிணைக்கு களங்கிலை கண்டார் கூடிடும்
வழக்கெலாம் உய்ந்தார்க்கு வரும்.

ஒருமையே உவந்தால் ஒக்கும் வெறுமையே
மருவில்லா நெறிகளால் மயங்குமோ-மாலவன்
இடுகின்ற பணிக்கென இவ்வுடலை இயக்கின்
சுடுகின்ற நெருப்பும் சுகமே.

ஓங்கும் தமிழால் ஒப்பிலா வேங்கடவன்
தாங்கும் தண்மாலை வாடாது-அனந்தன்
ஊட்டும் அன்பே உயர் அமுதாகி
காட்டும் கருணையே கண்.

ஔவியம் அகற்றி ஔடதம் ஆகிடுவான்
பௌவியம் நமக்கு பரந்தாமனே-சுடராய்
கௌவிய இருளகற்றி காட்டிடும் வழியிலே
வௌவிய உயிர்கள் வாழும்.

அஃகில்லா வரிவடிவம் அழகற்று போகுமே
எஃகனைய உறுதியினை இதயம்-கொண்டிட
ஸப்தகிரி சென்றின்று சடகோபனை அன்புடனே
ஒப்புடன் காண்பாய் உவந்து.

*****

# குசலவர் சுவாமி கதை

செல்வி இரா. வசுமதி - சென்னை.

## முன்னுரை

தமிழ் மொழியின் பழமையை - பெருமையை, எடுத்துக்கூறும் வகையில் அமைபவை அம்மொழியில், கிடைக்கும் சான்றுகள்தாம். அந்த வகையில், பழமை வாய்ந்த ஓலைச்சுவடிகளும், தாள் சுவடிகளும் நம்முடைய பாரம்பரியப் பொருள்களாகும். இத்தகைய சுவடிகளைப் பதிப்பித்து வெளியிட வேண்டுமென்பதில் சில நிறுவனங்கள் அக்கறை செலுத்துகின்றன. இதில் ஒன்று தான் உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம். இந் நிறுவனத்தில் உள்ள சுவடியே 'குசலவர் சுவாமி கதை'. இக் கதை இராமருடைய பிள்ளைகளான லவன், குசனைப் பற்றியது. இது, இராமாயணத்தின் ஒரு காண்டமாக அமைந்திருப்பினும், நாட்டுப்புற மக்களிடம் வில்லுப்பாட்டுக் கலையின் வழி கொண்டு சொல்லப்பட்டிருக்கிறது என்பதற்கு இச்சுவடியே ஒரு சான்று.

## நூலைத் தேர்ந்த முறை

அறிவியலின்வேகம்வளர்ந்து வருகின்ற இன்றைய காலக்கட்டத்தில், சமுதாயத்தில் உள்ள எல்லா மக்களும் கல்வி கற்றே தீரவேண்டும் எனறதொரு கட்டாய நிலை ஏற்பட்டிருக்கிறது. இதனால்தான் இன்று, அரசாங்கம் கல்லாத மக்களுக்காக முறைசாராக் கல்வி, வயது வந்தோர் கல்வி-எனத் திட்டங்கள் தீட்டிக் கல்வி புகட்டுகின்றது.

இந்தக் கல்லாத நாட்டுப்புற மக்களின் இலக்கியச் செல்வங்களாக மிளிர்பவை பல. அவற்றுள் ஒன்றுதான் அவர்களிடம் வழக்கிலிருக்கும் நாட்டுப்புறக் கதைகள். இக்கதைகள் சுவடிகளில் கதைப்பாடல் வடிவில் நமக்குக் கிடைக்கின்றன. எனவே இச்சுவடிகளைப் பதிப்பித்தல் என்பது இன்றைய நிலையில் தேவையான ஒன்றாகும். அதன்வழி 'குசலவர் சுவாமி கதை' என்ற இச்சுவடி பதிப்பாய்விற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட நூலாகும்.

## நூல்-பெயர்க்காரணம்

'சுவாமி' என்ற சொல்லாட்சியே இச்சுவடியில் சிறிது ஐயத்திற்கு இடமளிக்கிறது. அதாவது குறிப்பிட்ட சமயத்தைச் சார்ந்ததாக இருக்கக் கூடுமென்று எண்ணுவதற்கு இடம் தருகிறது இச்சொல்லாட்சி. ஆயினும் கூர்ந்து நோக்கின், பொதுவாக நாட்டுப்புற மக்கள் இறைவனைக் குறிக்க சாமி, கடவுள் என்று கூறுவது புலப்படும். அத்துடன் வைணவச் சமயத்திலும் சுவாமி-ஸ்வாமி என்ற சொல் இறைவனைக் குறித்தல் உண்டு. எனவே, பொதுப்பட இறைவனைச்சுட்டவே ஆசிரியர் 'சுவாமி' என்ற சொல்லைக் கையாண்டுள்ளார் எனத் தெளியலாம்.

லவன், குசன் இருவரில் குசன தான் மூத்தவன் என்பதால் ஆசிரியர் 'குசலவர்' என்று முறைப்படுத்திக் கூறியிருக்கிறார். இவர்கள் இறைவனின் குமாரர்களாதலால், இவர்களுக்கும் 'இறைவன்' என்ற அடைமொழி தந்து கதையை விளக்குகின்றார். 'லவகுசா' என்ற திரைப்படம் வந்ததன் வழியும், லவன், குசன் என்றே மக்கள் வழக்கில் கூறியதன் வழியும், 'குசலவர் சுவாமி கதை' என்ற இத்தலைப்பை எளிதில் அறிவதற்கு இடம் தரவில்லை.

## நூலாசிரியர் வரலாறு

"இவை கன்னங்குளத்திலிருக்கும் பொன்னையா நாடார் குமாரர் இராம நாடார் படித்து வருகிற குசலவர் சுவாமி கதை. நன்றாக நீடூழி காலம் வாழ்க"

என்று சுவடியின் தொடக்கத்திலே இச்செய்தி கூறப்பட்டுள்ளது. 'பொன்னையா நாடார்' என்பவர் மூல நூலாசிரியரா அல்லது படியெடுத்து எழுதியவரா என்பது பற்றிய தெளிவான குறிப்பில்லை. ஆயினும் 'படித்து வருகிற' என்னும் செய்தியை நோக்குமிடத்து, மூல நூலாசிரியர் வேறு ஒருவராகத்தான் இருக்கக்கூடுமென்பதும் இந்தச் சுவடி பரம்பரையாக எழுதியிருக்கக்கூடுமென்பதும் அறிய முடிகிறது. ஆதலால், குடிவழி முறையின்

மூலம் ஆராய்ந்தால் இச்சுவடியின் மூல நூலாசிரியரை அறிவதற்கு வாய்ப்புண்டு.

ஏடுகளில் எழுதப்பட்டுள்ள எழுத்து அமைப்பைக் காணும் போது ஆசிரியர் திருநெல்வேலி அல்லது குமரி மாவட்டத்தைச் சேர்ந்தவராக இருக்கக்கூடும் என்பது புலனாகும். ஏனெனில், 'ழ்'கரம் வரவேண்டிய இடங்களில் 'ள' கரத்தையும், 'ய'கரம் வரவேண்டிய இடங்களில் 'ச' கரத்தையும் பயன்படுத்தியுள்ளார் ஆசிரியர். உதாரணமாக,

"எளுபது வெள்ளம்
சேனைகளை" (177)
"படல மானதில்
எளுதித்தாரேன்" (60)
"ஆயிளை கைகேசி
ஏதுசொல்வாள்" (60)

என்பன போன்று எழுதப்பட்டுள்ளது. நாட்டுப்புற மக்களிடம் வழக்காற்றில் வழங்கிய வட்டாரச் சொற்களையும் ஏட்டில் பயன்படுத்தியுள்ளார். அதாவது. சமுசாரி, நாடோலம், பத்து தலை அரக்கன், எசங்கு போன்ற சொற்களாகும். எனவே, மூல நூலாசிரியரைப் பற்றி முழுமையா்க அறிய இயலவில்லையென்றாலும், இச்சுவடியின் வழி ஓரளவு அறிய முடிகிறது.

## நூலமைப்பு

12 ஏடுகளைக் கொண்ட இந்தச்சுவடி உரை எதுவுமின்றி, கதையானது பாடல் வடிவில், அதாவது 'கதைப் பாடல்' அமைப்பில் வடிவெடுத்துள்ளது. ஆசிரியர் ஒரு ஏட்டினை நான்கு பகுப்பாக்கி ஒரு பகுப்பிற்கு 6-லிருந்து 8வரை வரிகளையமைத்து ஏட்டின் இரு புறமும் எழுதி, ஏட்டின் எண் தந்து அமைத்துள்ளார்.

"துடைக்குச் சரியாக
மணல்குவித்து
தோகை மயிலாளை
அதில்கிடத்தி"

என மெய்யெழுத்துக்களுக்குப் புள்ளி வைத்துப் பாடல்களில் சீர், அடி பிரித்து எழுதப்பட்டுள்ளதை நோக்க இச்சுவடி பிற்காலச் சுவடியென்பது தெரிய வருகிறது.

கதைப் பாடலுக்குரிய 'நிகழ்த்து முறை' உத்தியைக் கையாண்டு, புராணக் கதைப் பாடல்களில் ஒன்றான இக்கதையினைத் தொடங்கும் போது முதலில் இறை வணக்கத்துடன்தான் தொடங்குகின்றார்.

"அரகரா சிவசிவா சிவனே
சரணம்
அரனுமை பார்வதி சிவசக்தி
சரணம்" (1)

என்று கூறி, மேலும் திருமால், இலக்குமி, கணபதி போன்ற பல தெய்வங்களையும் வணங்குகின்றார். பின்பு,

பாடறியேன் படிப்பறியேன்
பாட்டினுட
வகையறியேன்
ஏடறியேன் எழுத்தறியேன்
எழுத்தினுட
வகையறியேன்
நிகழாமல் யென்நெஞ்
சகத்தில்
நினைவில் குடிகொண்ட
தாயே" (6)

என்று அவையடக்கமாகக் கூறி,

"நாடா னதொரு நாடதிலே
நல்ல அயோத்திமா
நகர்தனிலே
தேசமானதோர் தேசத்திலே
தெய்வ அயோத்திமா
நகர்தனிலே" (16)

என நாட்டு வளத்துடன் கதையைத் தொடங்குகின்றார்.

ஆசிரியர் கதை கூறும் பாங்கில் நேராகக் கதையைக்கூறாது இடையிடையே,

"மானை விட்டுக்கலை
பிரிந்ததுபோல்
மாயவரு ராமரும்
பிரிந்தாரோ
தேனை விட்டுப்
பிரிந்தது போல்
தெய்வப் பெருமாளும்
பிரிந்தாரோ" (70)

என்று உவமையைக் கூறியும்,

"வாழைக் குறுத்தோநீ
வருக்கைப் பலாச்
சுளையோனீ
தென்னமரக் கனியோனீ
தெய்வச் சூடா
மணியோனீ (109)

என்று உருவகப்படுத்தியும்,

"தார மிழந்த மனைதனிலே
சாத்திரங் கள்சொல்
லலாமோ
மனையாட்டியில்லா
மனைதனிலே
மறையோ ரமுது
புசிக்கலாமோ" (132)

என்று பழமொழியின் அமைப்பை மாற்றியும் மரபுத்

தொடர்கள் சிலவற்றைக் கையாண்டு இருக்கிறர். மேலும் நம்பிக்கைகள், சடங்குகள் போன்றவற்றைக் கூறி, இடைச்செருகலாகச் சிலவற்றைப் புகுத்திப் பாடலின் நடையமைப்பை எளிமையான முறையில் அமைத்துக் கதையை நிகழ்த்துகின்றுர். கதையை முடிக்கும் போது,

"பாடும்போது கேட்டவர்கள்
பவுசையுடன் நன்ருய்
தழைத்துவாழ்க
..................................................
குசலவர்கள் கதையைக்
கேட்டவர்கள்
கோத்திர மெல்லாம்
தழைத்துவாழ்க"(20)

என்று பாடிக் கதை கேட்டதின் பயணக் கூறிப் பலரையும் வாழ்த்தி முடிக்கின்றுர்.

இவ்வாறு இந்தக் கதைப் பாடலை அமைத்து, விழாக்காலங்களில் மட்டுமின்றி, பொழுதுபோக்கிற்காக இல்லாமல் கல்வி புகட்டும் நோக்கத்துடன், நல்ல செயல்களை எடுத்துரைக்கும் தன்மையோடு வில்லிசைக் கலையின் மூலம் பாமர மக்களிடம் எடுத்துரைக்கின்ருர்.

## நூலின் சிறப்பு

'குசலவர் சுவாமி கதை' என்ற இந்தப் பதிப்பு நூலில் நாட்டுப்புறக்கதையின் இயல்பு வெளிப்பட்டு நிற்பதுதான் இந்நூலின் தனிச்சிறப்பு.

இராமாயணத்தின் ஒருசிறு பகுதியைக் கதைக்கருவாக்கி அதனுடன் கிராமங்களில் நடந்த சீர்கேடுகளைத் தொடர்புபடுத்தி மக்களுக்கு ஏற்ருர்போல் கதையை மாற்றி வெளிப்படுத்துகின்ருர்.

மக்களுக்குத் தேவையான பல அரிய கருத்துக்களை அறிவுறுத்தக் கருதிய ஆசிரியர் இறையுணர்வுக் கதையோடு எளிதில் ஏற்பர் என அறிந்து, இறையுணர்வுக் கதையோடு விளக்குகின்ருர். இப்படிக் கையாண்டுள்ள இந்த உத்தியே கதைப் போக்கிற்கு மேலும் சிறப்பூட்டுகின்றது.

### கதைச் சுருக்கம்

இராமர் 14 ஆண்டுகள் காட்டில் கழித்து விட்டு ஆவணி முதல் நாள் அயோத்திக்கு வருகிருர். அப்பொழுது மக்கள் ஆரவாரத்கோடு வரவேற்கிருர்கள். அரசாட்சியை ஏற்றபின்பு இராமர் பரதனிடம் வரிப் பணம் பற்றிக்கேட்க விவசாயிகள் வரி கொடுக்காமல் ஏமாற்றிவிட்டதாகச் சொல்கிருர் பரதன்.

இராமர் விவசாயிகளை அழைத்து ஆளுக்கொரு பூசணிக்காயைத் தரச்சொல்லுகிருர். அதற்குரிய பூசணி விதையையும் தருகிருர். அனுமனுக்கும் அவ்வாறே பூசணி விதை தருகிருர். விவசாயிகளின் காய்களை அழுகிவிடுமாறு செய்து, பின் ஒரு காயின் எடைக்கு அவர்களுடைய பொருள்களையெல்லாம் கேட்கிருர். அதை அவர்கள் இழக்கின்றனர். இப்பகுதி ஓர் இடைச்செருகலாக அமைகிறது.

அடுத்து, ஒரு வண்ணன் ஒழுக்கம் தவறிய தன் மனைவியை அடிக்க, அவள் இராமரிடம் சொன்னால் உனக்கு அபராதம் கிடைக்கும் என்கிருள். 'இராவணன் கூட்டிப்போன சீதையை வைத்திருக்கும் இராமரைப்போல் நான் உன்னை வைத்திருப்பேனா' என்று கேட்கிருன். நகர சோதனைக்குச் சென்ற இராம இலக்குவணர் இவ்வுரையாடலைக் கேட்கின்றனர்.

அரண்மனையில் கைகேயியின் பிடிவாதத்தால் சீதை இராவணனின் உருவத்தை வரைகின்ருள். இந்தப் படத்தை இராமர் பார்க்க நேரிடுகிறது. உடன் இராமர் இலக்குவனிடம் காட்டிற்குக் கூட்டிப் போய்ச் சீதையை வெட்டுமாறு ஆணையிடுகிருர். தம்பியும் அவ்வாறே அழைத்துச்செல்லுகிருன்; களைப்பால் சீதை தூங்கும் போது விட்டுப் பிரிகிருன்; வெட்டியதாக இராமரிடம் கூறி விடுகிருன்.

வனத்தில் வால்மீகி முனிவரின் பாதுகாப்பில் இருக்கும் சீதைக்கு ஆண் குழந்தை பிறக்கிறது. 'குசலவன்' என்று பெயரிடுகின்றனர். தண்ணீருக்குப் போகும் சீதை குழந்தையை உடன் எடுத்துச்செல்கிருள். இது தெரியாத வால்மீகி முனி பயந்து ஒரு தருப்பைப் புல்லைக் கிள்ளிப்போட்டுத் தொட்டிலில் ஒரு குழந்தையை உண்டாக்குகிருர். உண்மையைச் சீதை அறிய இருவரும் இக்குழந்தைக்கு 'அசலவன்' என்று பெயரிடுகின்றனர். இருவரும் முனியிடம் வில் வித்தை கற்று வளர்கின்றனர்.

வேள்விக் குதிரை ஒன்றை அனுமனிடம் ஒப்படைக்கிறார் இராமர். அந்தக்குதிரை கட்டறுத்து ஓட, கானகத்தில் குசலவர்கள் அதை அடக்கிப் பிடித்து விடுகின்றனர். அனுமன் உதவியால் குதிரை இருக்கும் இடமறிந்து குதிரையினை மீட்க இராம இலக்குமணர் சிறுவர்களுடன் போர் செய்து மயக்கம் அடைகின்றனர். உண்மை உணர்ந்த சீதை வருந்து, இராமரை உயிர்ப்பிக்கச் செய்கிறாள். பின் இராமனின் ஆணைக்கேற்ப சீதை தீக்குளிக்க அசலவன் வேள்வியில் கருகிவிடுகிறான். பின் குசலவனின் வேண்டுதலால் மீண்டும் உயிர் பெற அனைவரும் அயோத்தி அடைகின்றனர். குசலவர்க்கு முடிசூட்டி இராமரும் சீதையும் விண்ணுலகு அடைகின்றனர்.

## கண்டுவப்போம்!

உடையாளை, உள்ளம் நெக்குருகும் மதுரத் தமிழ்
நடையாளை, நாதன் திருவரங்கன் மயங்கிடும் எழிற்
படையாளை, பாவை யருளியெங்கள் பைந்தமிழ் வளர்க்
கொடையாளைக் கோதை யெனும்ஆண்டாளைக்
கண்டுவப்போம்!

பெண்ணமுதைப் பெரியாழ் வார்திருவமுதைக் காதல் வளர்க்
கண்ணமுதைக் கையிலோரு கிளியமுதைத் துழா யடியின்
மண்ணமுதை மரகத மணியமுதை மாத்தமிழ்க் கவிப்
பண்ணமுதைப் பரவச மாய்மனமினிக்கக் கண்டுவப்போம்!

சின்னஞ்சிறு சிற்றிடை சேர்பட்டழகை, அங்கமெ லாம்
மின்னுகின்ற மேன்மை மிகுநகையழகைச் சிரசினி லே
மன்னுபுகழ் கொண்டை மேல் குடியிருக்கும் முடிய ழகைத்
தன்னந்தனி வீற்றிருக் கும்தனியழகைக் கண்டுவப் போம்!

சீதைவழி வந்த திருநிலமகளை வில்லிபுத் தூர்
கோதையெனும் பட்டர் பிரான்குல மகளை பத்திமை யின்
போதையினால் திகழு மொருகவி மகளை மேவு புகழ்
கீதைசொன்ன கண்ண னவன் மணமகளைக் கண்டுவப்போம்!

-கவிஞர். குன்றக்குடி பெரியபெருமாள்

### மூலக்கதை:

வால்மீகி முனிவர் எழுதிய இராமாயணத்திலும், கம்பராமாயணத்திலும் ஏழாவது காண்டமாக அமைவது 'உத்தர காண்டம்'. தமிழில் இக்ககாண்டத்தைக் கம்பர் எழுதியதாகவும், ஒட்டக்கூத்தர் எழுதியதாகவும் இரு கருத்துக்கள் நிலவுகின்றன. எனினும் தமிழிலக்கியத்தைப் பொருத்தவரையில் போதிய சான்றுகள் இல்லாமையால் ஆசிரியர் யாரெனத் துணிவதற்கில்லை. ஆயினும் இப்பகுதி இடமபெற்றிருத்தலை அறிய முடிகிறது.

வனத்தில் சீதை இரண்டு குழந்தைகளைப் பெற்றெடுக்கிறாள். ஒளியுடன் பிறந்த இராஜகுமாரர்களுக்கு ஏதேனும் துஷ்ட தேவதைகளின் தீங்கு நேருமோ என்று அஞ்சி வால்மீகி 'குசம்' என்கிற தருப்பைப் புல்லை இரண்டாக்கி மந்திரம் ஜெபித்து நுனியால் மூத்தவனைத் தடவி ரட்சை கட்டுகிறார். அடிப்பகுதியாகிய லவத்தினால் இளையவனைத் தடவி ரட்சை கட்டுகிறார். எனவே மூத்தவன் குசனாகவும், இளையவன் லவனாகவும் அழைக்கப்பகின்றனர்.

சீதை தன் கற்பை மீண்டும் நிலைநாட்டும் சமயத்தில்,

"சீதை உடனே, தான பதிவிரதை என்பது உணமையானால் என்னைப் பெற்ற பூமா தேவி எனக்குத் தன்னுள் இடங்கொடுக்கக் கடவள்" (வால்மீகி ராமாயண வசனம், யுத்தகாண்டமும் உத்தர காண்டமும், பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியார் சுவாமிகள், ப. 224.)

என்று மூன்று தரம் சபதம் செய்தவுடன் பூமாதேவி மண்ணைப்பிளந்து கொண்டு சீதையை அணைத்துக் கொண்டு மறைந்து விடுகிறாள். சிலகாலம் இராமர் ஆட்சி புரிந்து, பின் குசலவர்களிடம் ஒப்படைத்து விட்டு பரமபதம் அடைவதாக வால்மீகியின் உத்தர காண்டக் கதை அமைந்துள்ளது.

### ஏன் மாறுபாடல்

குசலவர் கதை பாமர மக்களிடம் வில்லுப்பாட்டுக் கலையின் மூலம் எடுத்துச் செல்லப்பட்ட

ஒன்று. பலர் வாயிலாகக் கதைகளைக் கூறக்கேட்டு அவரவர் தங்களுக்கேற்ப மாற்றிக்கொள்ளுதலும், நினைவாற்றலின்மையும், புதியதாகச் சேர்த்துக் கூற வேண்டும் என்ற எண்ணப்பாங்கும் கதை மாறுபடுவதற்குக் காரணமாகின்றன.

"முக்கியமாக பாலகாண்டத்தில் பல பாகங்களும் உத்தரகாண்டத்தில் பெரும் பாகமும் இடைச் செருகல்கள் என்றும் சொல்லப் படுகின்றன."

(கலைக் களஞ்சியம் தொகுதி-2, ப.70.)

என்று கூறுவதன் வழியும், நாட்டுப்புற மக்களால் பாடப் பட்டு வந்த இந்தக் குசலவர் சுவாமி கதையிலும் இடைச் செருகல்கள் இருத்தல் இயல்பு தான்.

## பதிப்புரை

ஏட்டில் உள்ளதை உள்ளவாறு பதிப்பிப்பதைவிட, தவறுகளைத் திருத்திப் பதிப்பிக்கும் போதே அப்பதிப்பு சிறப்பாக அமையும்.

"தேர்ந்தெடுக்கப் பெற்றச் சுவடியை வைத்துத் தூய படியினை உருவாக்குதல்; பிற சுவடிகளைக் கொண்டு வேறுபாடுகளைக் குறித்து முழுமையாக்குதல்; உரை விளக்கம், முன்னுரை, ஆய்வுரை முதலானவற்றைத் திரட்டி அமைக்கும் ஆய்வுப் பணியினை மேற்கொள்ளுதல்"

('சுவடிப் பதிப்பில் சில அணுகுமுறைகள்', கருத்தரங்கக் கட்டுரை, டாக்டர் பூ. சுப்பிரமணியம், ப.1.)

என்பதற்கேற்ப இச்சுவடிப்பதிப்பிலும் சென்னைப் பல்கலைக்கழகக்கீழ்த்திசைச் சுவடி நூலகத்திலிலுள்ள வேறு சில சுவடிகளுடன் ஒப்புநோக்கியும், பாடல்களைத் திருத்திப் படியெடுத்தும், இடையிடையே பாடல்களுக்குத் தலைப்பு தந்தும் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

"முன்னோர் மொழி பொருளே
யன்றி யவர் மொழியும்
பொன்னே போல் போற்றுவர்"

(தாமோதரம், வீரசோழியம், பதிப்புரை, ப.34.)

என்னும் கூற்றும் இப்பதிப்பில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வின் பயன்

1. நாட்டுப்புற இலக்கியத்தில் சுவடியைப் பதிப்பித்தலால் எந்த அளவிற்கு அவர்களிடம் ஏட்டிலக்கியம் சென்றிருக்கிறது என்பதை அறிய முடிகிறது.
2. இந்தச் சுவடியின் வாயிலாக, நாட்டுப்புற வட்டாரத்தில் வழங்குகின்ற கதையினை அறியமுடிகிறது.
3. இச்சுவடியின் மூலம் கதையில் மாற்று வடிவங்களைப் பற்றிய செய்தி தெரியவருகின்றது.
4. சமயத்தின்வழி நல்ல கருத்துக்களை வெளிப்படுத்தவே விழைகின்றனர் என்பதும் அறியமுடிகிறது.
5. இச்சுவடியின் வழிச் சமுதாயச் செய்திகளையும் அறியமுடிகிறது. ★

# பஞ்சலோக சிற்பக்கலை
# (ஓர் இந்தியரின் சாதனை)

திரு. வி.பி.கே. மூர்த்தி - பாபநாசம்.

உலகம் வியக்கும் கலைகளில் மிகவும் உயர்வான கலையாகக் கருதப்படுவது உலோக சிற்பக் கலையாகும். உலோக சிற்பக் கலையில் முதல் உறைவிடமாக விளங்குவது சுவாமிமலை ஆகும்.

தஞ்சை மாவட்டம் சுவாமிமலை முருகனுக்கு உரிய சிறப்பிடமாக விளங்கி பக்தர்களை ஆட்கொள்கிறது. அதே போல் முருகனின் அருளாசியோடும், அருட்கண்பார்வையோடும், விஸ்வகர்ம சிற்பிகள், நாளும் பொழுதும் தெய்வீக விக்கிரகங்களை வார்க்கும் பணியில் தங்கள் வாழ்நாளை அர்ப்பணித்து தெய்வத்தோடு தெய்வமாக இலங்குகிறார்கள்.

தஞ்சைப் பெரிய கோவில் எனப்படும் பெருவுடையார் கோயில் கட்டிய பரம்பரை ஸ்ரீகண்ட ஸ்தபதியின் வம்சாவழியினர் சுவாமிமலையிலும் தங்கியிருந்தனர். அவர்களுள் முக்கியமானவர்கள் ஸ்ரீமான்கள் ஸ்ரீகண்ட ஸ்தபதி, கோஸ்தி நாத ஸ்தபதி, அண்ணாசாமி ஸ்தபதி, கிருஷ்ணமூர்த்தி ஸ்தபதி ஆவர்.

ஸ்ரீகண்ட ஸ்தபதியின் குமாரர்களில், இரண்டாவது குமாரர் எஸ். கருணாநிதி ஸ்தபதி. இவர் இளமையில் இருந்தே, பஞ்சலோக வார்ப்புக் கலையை ஸ்ரீமான் அண்ணாசாமி ஸ்தபதியிடம் குருகுல முறையில் கற்றுக்கொண்டார். சிற்பக் கலையில் முழுமையாகத் தேர்ச்சிப் பெற்றவர்.

சுமார் 40 ஆண்டுகளுக்கு முன் கல்கத்தா சென்றார். அங்குள்ள வைகுந்த நாதன் மந்திர் என்ற ஆலயத்திற்குப் பெருமாள், ஸ்ரீதேவி, பூதேவி ஆகிய உலோக சிலையை செய்து கொடுத்தார்.

கல்கத்தா வைகுந்த நாத பெருமானின் பரிபூரண ஆசியோடு, சுவாமிமலையான தனது சொந்த ஊரில் ஸ்ரீ முருகனின் நல்லாசியோடு ஒரு சிறிய சிற்பக் கூடத்தை ஏற்படுத்தினார். அது நாளும், வளர் பிறையாக வளர்ந்து இன்று "குபேரன்" சிற்பக் கூடமாக வளர்ந்து நிற்கிறது.

## முதல் சிலை முருகன்

இங்குள்ள கூட்டுறவு சங்கம் மூலமாக முருகன் சிலையொன்றை வார்த்தார். இதனை மலேசியாவிற்கு அனுப்பினார். இது போல நூற்றுக்கணக்கான சிலைகளை செய்து கொடுத்தார். தானும் வளர்ந்தார். சங்கத்தையும் வளர்த்தார்.

## அமெரிக்கா தாமரைக் கோயில்

தவத்திரு சுந்தர சுவாமிகள் அருளாணையின்படி, பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்களின் சீரிய மேற்பார்வையில் கருணாநிதி ஸ்தபதியார் அமெரிக்காவில் உள்ள வர்ஜீனியாவுக்கு தாமரைக்கோயிலின் கோபுரத்தை செய்து கொடுத்தார். கோபுரம் வேலையை முடிக்க எஸ். கருணாநிதி ஸ்தபதியும், அவர் மகன் குபேரன் ஸ்தபதி, மோகன்ராஜ் ஸ்தபதியும் அவரது குழுவினரும் மிகவும் அரும்பாடுபட்டு அற்புதமாக பணி செய்தார்கள். இதனை வர்ஜீனியா நகரத்தில் ஸ்ரீலஸ்ரீ சச்சிதானந்த சுவாமிகள் சர்வ மதத்தினரும் வழிபடும் முறையில் 'தாமரைக் கோயில்' கட்டி எழுந்தருளச் செய்து இருக்கிறார்கள். தமிழ் நாட்டில் சிற்பக் கலை வெளிநாட்டில் இடம் பெற சுவாமிமலை சிற்பி எஸ். கருணாநிதி ஸ்தபதி எடுத்துக் கொண்ட முயற்சியை தமிழ்நாடும், வெளிநாடும் பாராட்டியது.

## வெள்ளி ரதம்

கோவை, சிரவணபுரம் என்ற இடத்தில், சிரவை ஆதீனகர்த்தர் ஸ்ரீலஸ்ரீ சுந்தர சுவாமிகள் கௌமார மடாலயத்தை ஸ்தாபித்து உள்ளார்கள். குன்னூர் சுவாமி ஸ்ரீசத்குரு ராஜயோக ஆசிரமம் சாந்தலிங்க அடிகளார் மூலம், சுவாமி மலை கருணாநிதி ஸ்தபதியை கௌமார மடாலயம் ஸ்ரீலஸ்ரீ சுந்தர சுவாமி

கள் தேர்ந்தெடுத்து, முருகனுக்காக 12 அடி உயர வெள்ளி ரதம் ஒன்றை செய்ய அனுக்கிரகித்தார்கள். முருகனின் பேரருளால் வெள்ளி ரதம் வேலையை சிற்பி இனிதே முடித்தார்.

## நர்த்தன விநாயகர்

முருகனை அடுத்து நாலரை அடி உயரத்தில் நர்த்தன விநாயகர் அமைக்கும் பணி கிடைத்தது. இந்திரா காந்தியின் பிரதம ஆலோசகர் சென்னை மைலாப்பூர் சாயிதாசன் முத்து வெங்கட்ராமன் மூலம் இந்த அரிய வாய்ப்பு கிடைத்தது. நர்த்தன விநாயகர் ஜம்மு, காஷ்மீரில் உள்ள தர்மாத் டிரஸ்ட் கவுன்சில் ரகுநாத் மந்திர்க்கு அனுப்பப்பட்டது. மூலஸ்தான விக்ரமாக 6 அடி உயர ஸ்ரீநடராஜரும், இதே இடத்திற்கு அனுப்பப்பட்டது. டாக்டர். கரன் சிங் இதனை மேற்பார்வையிட்டு மகிழ்ந்தார். சிற்பியை தனது வீட்டுக்கு அழைத்து, விருந்தினர்களையும் அழைத்து சிற்பி எஸ். கருணாநிதி ஸ்தபதியை பராட்டிக் கௌரவித்தார்.

## ஸ்ரீ ஒப்பிலியப்பன் கோயில்

தஞ்சை மாவட்டம், திருநாகேஸ்வரம் தென்திருப்பதி என அழைக்கப்படும். இங்குள்ள ஸ்ரீ வெங்கடாஜலபதிக்கு ஒப்பிலியப்பன் என்ற திருநாமம் உண்டு. இந்த ஒப்பிலியப்பனுக்கு சங்கு, சக்கரம், வரத ஹஸ்தம், கும்பிடும் காங்கள் இவைகளுக்குக் கல் பதித்த கவசம் செய்யும் பணி ஸ்ரீபட்டாச்சாரியார் கோவிந்தராஜ பூஜகர் நன்கொடையாளர் திரு. பாலச்சந்திரன் கோயில் அதிகாரிகள் மூலம் கிடைத்தது. இந்த கலசங்களுக்கு கமல ரத்தினங்கள் எனப்படும் நீலம், பச்சை, சிவப்பு, ஆரஞ்சு கற்கள் பதிக்கப்பட்டன. ஆயிரங்கோடி சூரியர்களை ஒன்றாகக் கொண்டு வந்ததுபோல இந்த கல் பதித்த கவசங்கள் பெருமாளை அலங்கரித்து பக்தர்களை இன்னும் ரட்சிக்கின்றன.

"பெருமாள் அழைக்கும் இடத்திற்கு எல்லாம் நான் போவேன். அவர் என்னை தனக்கே தொண்டு செய்யும்படி கட்டளையிடுகிறார். அவரோடு ஒன்றிப் போய் நான் என் பணியில் ஈடுபடுகிறேன்" என ஸ்தபதியார் கூறும்போது நமக்கு அவர்தம் பணியார்வமும், பக்தி ஈடுபாடும் நன்கு தெரிகின்றது.

## எர்ணாகுளம் தங்கக் கருடன்

கேரளா மாநிலம் எர்ணாகுளத்தில் திருமலை தேவஸ்தானம் என்று கோயில் இருக்கிறது. இங்குள்ள ஸ்ரீவெங்கடாஜலபதிக்கு தங்க கருட வாகனம் செய்யப் பத்தாண்டுகளாக ஸ்தபதியைத் தேடினார்கள். பொள்ளாட்சி எம். சேதாரண்ய ஸ்தபதி அவர்களிடம் எர்ணாகுளம் கோயிலார் சென்று கேட்டபோது, அவர் சுவாமிமலை கருணாநிதி ஸ்தபதியை அறிமுகம் செய்தார்கள்.

சுமார் 13 கிலோ தங்கத்தில் தகடு வார்த்து 103 நாட்களில் கருடவாகனத்தை பூர்த்திசெய்து பெருமாளுக்கு அர்ப்பணித்தார். கருடவாகனம் உயரம் ஆறரை அடி. ஸ்தபதி எஸ். கருணாநிதிககு தஙக மெடல் அணிவித்து, பாராட்டி கௌரவித்தார்கள், எர்ணாகுளம் கோயிலார்.

10 ஆண்டுகளாக முடியாமல் இருந்த கருட வாகனப்பணியை ஸ்ரீபெருமானே கருணாநிதி ஸ்தபதியாக வந்து, கருட வாகனம் செய்து கொடுத்ததாக பெருமானிடம் பிரார்த்தித்தார்கள் எர்ணாகுளம் மக்கள்.

## மகா துர்க்கை

மத்தியபிரதேசம் மைகர் என்ற ஊரில் எழுந்தருளியிருப்பது ஸ்ரீநீலகண்ட ஆசிரமம். ஸ்ரீலஸ்ரீ மகா தேவ தாஸ் சுவாமிகள் அருளாணையின் வண்ணம் திருவாட்சியுடன் கூடிய எட்டரை அடி உயர மகா துர்க்கையை கருணாநிதி ஸ்தபதி செய்தார். சிங்க வாகனத்தில் அமர்ந்த கோலத்தில், 18 கை கருடன், வீராவேசம், அனுக்கிரகம் ஆகிய அமைப்புடன் துர்க்கை வார்த்து, எழுந்தருளச் செய்தார்.

## சிவலிங்கம்

ஆயிரம் கிலோ எடையில், சிவலிங்கம் ஒனறையும் நாலரை அடி உயரத்தில் நிர்மாணித்தார் கருணாநிதி ஸ்தபதி. சிவ லிங்க பாணத்தில மீது சிவன் முகம், பிறைச்சந்திரன், ஜடா முடி காட்டப்பட்டிருந்த அழகு எல்லோருடைய உள்ளத்தையும் கொள்ளைக் கொள்வதாக இருந்தது. உலோகத்தில் வடித்தெடுக்கப்பட்டுள்ள இபபெரிய சிவ லிங்கம் கின்னஸ் சாதனையில் இடம் பெறவேண்டிய ஒன்று.

## ஆதிசங்கரர் திருமேனி!

சுவாமிமலை உலோக கூட்டுறவு சங்கத்தின் மூலம் சிற்பி எஸ். கருணாநிதி ஸ்தபதி ஆதி சங்கரரின் திருமேனியை உலோகத்தில் வார்த்தார். உயரம் இரண்டரை அடி, எடை சுமார் 200 கிலோ. ஆதிசங்கரரை நேரில பார்ப்பது போலவே திருவுருவம் அமைத்திருந்ததைக் கண்டு சிற்பியை பலரும் பாராட்டினர்.

பம்பாய் ஆதிசங்கரர் கோயிலில் இது ஸ்ரீலஸ்ரீ சிருங்கேரி சங்கராச்சாரிய சுவாமிகளின் திருக்கரங்களால், இந்த ஆதிசங்கரர் சிலை ஸ்தாபிதம் செய்யப்பட்டது. ஆதிசங்கரர், அவருடைய நான்கு சீடர்களும், சங்கரரின் உபதேசம் கேட்பது போன்ற காட்சியை சுவாமி மலை சிற்பி எஸ். கருணாநிதி ஸ்தபதி சிறப்பாக செய்து இருக்கிறார் என ஸ்ரீசிருங்கேரி சங்கராச்சாரியார் சுவாமிகள் பாராட்டிக் கௌரவித்துள்ளார்.

## மகா நாராயணர

சுமார் 1500 கிலோ எடையில் எட்டரை அடி உயரத்தில் மகா நாராயணர் சிலை ஒன்றையும் பஞ்சலோகத்தில் ஸ்தபதி செய்து வருகிறார். இதற்கு இணையான ஸ்ரீ மகாலட்சுமி சிலையையும் வார்த்து செய்ய இருக்கிறார். இந்தப் பணிகள் முடிய இன்னும் 6 மாதம் பிடிக்கும்.

விஸ்வகர்ம சிற்பிகளின் பாரம்பரிய சிற்பக் கலையை சுவாமிமலை சிற்பி எஸ். கருணாநிதி ஸ்தபதி, இந்த நாராயணர் சிலை மூலம் நிரூபித்துக் காட்டியிருக்கிறார்.

## டிவியில் நாராயணர் வார்ப்பு

டில்லி டி.வி. நிலையம் இந்த ஆண்டை சுற்றுலா ஆண்டாகக் கொண்டாடுகிறது. டில்லி தேசிய நிகழ்ச்சியில், சுவாமிமலை குபேரன் சிற்பக் கூடத்தில் ஸ்ரீநாராயணர் சிலை செய்யும் நிகழ்ச்சியை படமெடுத்துச் சென்று, 13-4-91 அன்று இரவு 10 மணிக்கு "சுரபி" என்னும் தலைப்பில் காட்டி சிற்பிகளைப் பெருமைப்படுத்தினார்கள்.


மகாநாராயணர் திருவுருவச்சிலை செதுக்கப்படுகிறது.

## சிற்பிக்குக் கிடைத்த பட்டங்கள்

"சிரவை ஆதீன சிற்பி"யாக கௌமார மடாலய ஆதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ சுந்தர சுவாமிகள் நியமனம் செய்தார்கள். "செம்பொற்சிலை கலைஞர்" என்ற பட்டத்தை திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் முன்னிலையில் சுந்தரசுவாமிகள் 1981ல் வழங்கினார்கள். தங்கப் பதக்கமும், விருதும் கொடுத்து காசி மடம் சமஸ்தானம், ஸ்ரீமத் சதீந்திர தீர்த்த சுவாமிகள் ஜனவரி 1990ல் வழங்கி கௌரவித்தார்கள். தமிழ்நாடு அரசின் அங்கீகரிக்கப்பட்ட ஸ்தபதியாக தமிழ்நாடு அரசாங்கம் ஆணைப் பிறப்பித்துள்ளது.

தஞ்சை மாவட்டம் சுவாமிமலையில் பிறந்து சுமார் 10 வயது முதல் சிற்பக் கலை வார்ப்பில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்ட சிற்பி எஸ். கருணாநிதி ஸ்தபதி 53 வயதில் பீடு நடை போட்டுக்கொண்டு இருக்கிறார்.

இவர் தற்சமயம் சுவாமிமலை உலோக விக்கிரக கூட்டுறவு விற்பனைச் சங்கத்தின் தலைவராகவும் விளங்கி வருகிறார்.

கோயில் பூஜைக்கான விக்ரகங்கள், தங்கத் தேர், வெள்ளிர

தம், சுவாமிகளுக்கு உரிய கவசங்கள், கிரீடங்கள், கோபுர கலசங்கள், திருவாட்சிகள், கோயில் சன்னதிக்கு அலங்கார தகடுகள் போர்த்தும் பணி ஆகியவற்றையும் இவர் திறம்பட செய்து வருகிறார்.

சுவாமி மலை சிற்பி எஸ். கருணாநிதி ஸ்தபதி செய்யும் இந்தச் சிலையே இந்தியாவின் மிகப் பெரிய நாராயணர் சிலை என சிற்பிகள் வட்டாரம் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

இந்த மகா நாராயணர் சிலை வேலை நடப்பதை தஞ்சை மாவட்ட ஆட்சித் தலைவர் விவேக் ஹரி நாராயணன், கலைமகள் ஆசிரியர், திரு. முத்துவெங்கட்ராமன், கௌமார மாடாலயம் ஆதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ தவத்திரு சுந்தர சுவாமிகள், மகாலிபுரம் கணபதி ஸ்தப்தி, தமிழ்ப் பல்கலைக் கழக சுவடி புல ஆய்வாளர் நாகராஜன், அமெரிக்கா ஷோபாநாராயணசாமி, ஹவாய் கேசவதாஸ் பட்டாச்சாரியார், ஹாலந்து சௌஜா, டென்மார்க் லோன்கௌகெட் ஹேணட்சன், பிரான்சிஸ் அழகப்பன், மெக்ஸிகோ பெஞ்சமின் பிரிசுடிஸ், நார்வே சீமா மால்வியா மற்றும் பலரும் அண்மையில் சுவாமிமலைக்கு வந்து சிலை தயார் ஆவதைப் பார்வையிட்டு பாராட்டி, குறிப்பு எழுதிச்சென்றுள்ளனர்.

### ஸ்ரீமான் கோவிந்தராஜ பட்டாச்சாரியார்

திருநாகேஸ்வரம் ஸ்ரீஒப்பிலியப்பன் கோயில் பட்டாச்சாரியர்களுள் ஒருவர் கோவிந்த பட்டாச்சாரியார், முத்துப்பட்டாச்சாரியார் இவர்கள் இருவரும் சிற்பக் கூடத்திற்கு வருகை புரிந்து தயாராகி வரும் ஸ்ரீமகா நாராயணன் சிலையை பார்வையிட்டனர்.

"பெருமானை தத்ரூபமாக எடுத்துக் காட்டுவது போல் பெருமாள் முகம் அமைந்திருக்கிறது. சிலையின் கை, மார்பு கால்கள் எல்லாமே சாஸ்திர முறைப்படி, பூஜைக்கு உரியதாக அமைக்கப்பட்டுள்ளது. இந்த மகா நாராயணர் சிலை இந்தியாவிற்குப் பெரும் புகழைத் தேடித்தரும் என்பதில் ஐயமில்லை" என வாழ்த்துக்கள் கூறியுள்ளார்.

***

## மூன்று வகை வினைத்தொகுப்பு

மூன்று வகை வினைத்தொகுப்பு என்பது பிராரத்தம், சஞ்சிதம், ஆகாமியம் என்பார்கள்.

**பிராரத்தம்:** இப்பிறவிக்கு முன் பிறந்த பல பிறவிகளில் செய்த வினைத்தொகையில் இபிறவியில் அனுபவிப்பதற்கு என்று அளந்து கொள்ளப் பெற்ற வினைத்தொகுதியைப் பிராரத்தம் என்கிறோம்.

**சஞ்சிதம்:** இந்த பிராரத்தம் போக எஞ்சிய வினைத் தொகுதியைச் சஞ்சிதம் என்கிறோம்.

**ஆகாமியம்:** இப்பிறப்பில் செய்யப்பெறும் வினைதொகுதி ஆகாமியமாகும்.

## நான்கு வகை ஜீவ நதிகள்

அண்டசம், சுவேதசம், உத்பீசம், சராயுசம் என்ற நான்கு வகை யோனிகளால் ஜீவ உற்பத்தியாகின்றன. அவையாவன:

1. **அண்டசம்:** முட்டையில் தோன்றுபவை - பறவை, ஊர்வன, நீர்வாழ்பவை ஆகும்.
2. **சுவேதசம்:** வேர்வையில் தோன்றுபவை - கிருமிகள், கீடம், பேன் போன்றவைகள்.
3. **உத்பீசம்:** வித்து, கிழங்கு, வேர், கொம்பு கொடி முதலியவைகளின் உதவியால் உண்டாவது - மரம், கொம்பு, கொடி முதலியவைகளாகும்.
4. **சராயுசம்:** கருப்பையில் தோன்றுபவை - தேவரும், மனிதரும், நாற்கால் விலங்குகளுமாகும்.

திரு. இலட்சுமணன் - சேடப்பாளையம்.

# பரிபாடலில் பரமன் வழிபாடு

திரு. வி.சா. பாலசுப்ரமணியன் - தஞ்சாவூர்.

தமிழின் தொன்மையான இலக்கியம் சங்க இலக்கியம். பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்பன அவை. எட்டுத்தொகை நூல்களில் ஒன்று பரிபாடல். இந்நூலில் மதுரை, திருப்பரங்குன்றம், திருமாலிருஞ்சோலைமலை முதலியவற்றின் பண்டைக்கால நிலைகள், வேதத்தை அடிப்படையாகக் கொண்ட வைதீக ஒழுக்கங்கள், தெய்வ வழிப்பாட்டு முறைகள் முதலியன சிறப்பாகக் குறிப்பிடப்படுகின்றன.



இப்பரிபாடலில் திருமாலின் திருவுருவம் முதலியன பற்றி 1,2,3,4,13,15 திரட்டு 1, ஆகிய எண்ணுள்ள ஏழு பாடல்கள் கூறுகின்றன. பாதாதி கேசம் (அடிமுதல் முடிவரை) கேசாதி பாதம் (முடி முதல் அடி வரை) ஆகிய அடிப்படையில் வருணிக்கப்படும் வழக்கம் உண்டு. தெய்வமாதலால் இக்கட்டுரையில் பாதாதிகேச வருணனை அடிப்படை பின்பற்றப்படுகின்றது.

## திருமாலின் நிறம்

திருமாலின் நிறத்திற்கு மேற்கண்ட ஏழுபாடல்களைப் பாடிய கீரந்தையார், கடுவன் இளவெயினனார், நல்லெழுநியார், இளம்பெரு வழுதியார் ஆகிய அனைவருமே முறையே கார்மேகம், காயாம்பூ, நீலமணி, நீலக்கடல், இருள் முதலியவற்றையே உவமையாகக் காட்டுகின்றனர்.

"கார்மலர்ப் பூவை கடலை
இருள்மணி
அவை ஐந்தும் உறழும் மணிகிளர்
மேனியை"
(பரிபாடல்: 13:42-43)

என்று நல்லெழுநியார் குறிப்பிடக் காணலாம்.

"கார் இருள் மயங்கு மணி மேனியன்" (பரி 15) என்பது இளம்பெருவழுதியார் பாட்டு.

"பச்சை மாமலைபோல் மேனி" என்னும் ஆழ்வாரின்

பாசுரத்தில் 'பச்சை' என்பது நீலமலையையே குறிப்பதாகும்.

## படுக்கை

ஆயிரம் தலை கொண்ட ஆதிசேஷன்தான் அவரது இருப்பிடம். அதாவது அறிதுயில் கொள்ளும் மகாவிஷ்ணுவின் படுக்கை. அந்த ஆதிசேஷனின் ஆயிரம் படங்களிலும் சுடர்விடும் மணிகள் ஒளிரும்.

"மின்அவிர் சுடர்மணி ஆயிரம் விரிந்த
கவைநா அருந்தலைக் காண்பின் சேக்கை
துளவம் சூடியஅறிதுயிலோனும்
(பரி: 13:27-29)

என்பார் நல்லெழுநியார். இதில் பிளவுபட்டநாக்கினைக் கொண்ட ஆதிசேஷன், அறிதுயில் கொள்ளும் திருமால், கண்ணிற்கினிய படுக்கை என்று வருணிக்கப்படுதல் காணலாம். பிற்காலத்தில் வந்த குலசேராழ்வார்,

"இருளிரியச் சுடர்மணிகள் இமைக்கும் நெற்றி
இனத்துத்தி யணிமணிகள் ஆயிரங்கள் ஆர்ந்த
அரவரசப் பெருஞ்சோதி அனந்தன் என்னும் அணிவிளங்கும் உயர் வெள்ளை அணையை மேவி
திருவரங்கப்பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும்
கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்டு"

என்று பாடக்காணலாம்.

## திருவடிகள்

திருமாலின் திருவடிகள் தாமரை மலர் போன்று செந்நிறம் கொண்டனவாகவும் மென்மையாகவும் இருக்கும். அத்திருவடிகள் அன்பர்களுக்கு வைகுந்தப் பதவியை அளிக்க வல்லன. அதாவது பிறவிப் பிணியைப் போக்கி முக்தியைத் தரவல்லன என்பது கருத்து. தன்னை வணங்கியவர்களின் மயக்கத்தை அறுக்கும் தெய்வம் திருமால். அதனால் அவரைத்தொழுங்கள். அவர் உறையும் திருமாலிருஞ் சோலைமலையைக் கண்டு பணியுங்கள் என்கிறார் இளம்பெருவழுதியார். இது மதுரைக்கருகில் உள்ள ஓர் வைணவத்தலம்.

"எவ்வயின் உலகத்தும் தோன்றி அவ்வயின்
மன்பது மறுக்கத் துன்பங்-
களைவோன்" (பரி: 15)

என்று வருவது அவர்தம் பாட்டு.

அத்திருவடிகள் மூவேழு உலகங்களையும் அளந்த சிறப்புடையன. "கீழ் ஏழ் உலகம் உற்ற அடியினை" (பரி: 3) என்பார் கடுவனிளவெயினனார்.

"நின்னிற் சிறந்த நின்தாள் இணை அவை" (பரி: 4) என்று மேலும் அவர் பாடுவார். "மறுபிறப்பறுக்கும் மாசில் சேவடி" (பரி: 3) என்பதும் காண்க.

## ஆடை:

திருமாலின் ஆடை பீதாம்பரம் என்பர். இதனை இளம்பெருவழுதியார் "பொன்புனை உடுக்கையோன்" (பரி: 15:27) என்றும், "எரிதிரிந்தன்ன பொன்புனை உடுக்கையை" என்று பரிபாடல் கடவுள் வாழ்த்துப் பாட்டும் குறிப்பிடக்காணலாம்.

## உந்தி:

திருமாலின் கொப்பூழ் சிறப்புப்பெற்றது. தாமரை மலர் போல்வது. பிரம்மா அவ்வுந்திக் கமலத்தில் தோன்றியதனை

"தாமரைப்பூவினுள் பிறந்தோனும், தாதையும்
நீயென மொழியுமால் அந்தணர் அருமறை"
(பரி. 3)

என்று வேதத்தை மேற்கோள் காட்டி பேசுவது கடுவன் இளவெயினனார் பாட்டு.

".......நடுவண் தோன்றிய வாய்மொழி
மகனொடு மலர்ந்த
தாமரைப் பொகுட்டு....."
(பரி: 3)

என்றும் அவர் பாடக்காணலாம்.

## திருக்கரங்கள்:

திருமாலின் திருக்கரங்கள் நான்கு என்பர். ஆயினும் பரிபாடல் அவருக்கு எண்ணற்ற கைகள் இருப்பதாகப் பாடுகிறது.

"பதினாயிரங்கை முதுமொழி முதல்வ
நூறுயிரம் கை ஆறறி கடவுள்"
(பரி. 3.42-43)

என்பர் கடுவனிளவெயினனார்.

மகாவிஷ்ணுவின் திருக்கைகள் தண்டு, சங்கு, சக்கரம், வில், அம்பு, பாரா, வளை, வாள் முதலியவற்றை ஏந்தியிருப்பதாக இளம்பெருவழுதியார் பின்வரும் பாட்டில் தெரிவிக்கிறார்.

"வள்ளணா வள்ள நாஞசல்லை
சலம்புரி தண்டு ஏந்தினவை
வலம்புரி வயநேமியவை
வரிசிலை வயவம்பினவை
புகர் இணர்சூழ்வட்டத்தவை,
புகர் வாளவை"
(பரி: 15-57-61)

என்பது அப்பாட்டு.

சூரியன் போல சக்கராயுதமும், சந்திரன் போல சங்கும் திருமாலின்கையில் இருப்பதாக

"இருவேறு மண்டியத்து
இலக்கம்போல
நேமியும் வளையும் ஏந்திய
கையால்"

என்று 13ஆம் பாட்டு அடிகள் தெரிவிக்கின்றன. "திருமால் சக்கராயுதம் மட்டும் வைத்திருப்பதாக,

"பொன்அணி நேமி வலங்கொண்டு
ஏந்திய
மன்னுயிர் முதல்வன் ஆதலின்"
(பரி. 1:52-57)

என்று கடவுள் வாழ்த்துப் பாட்டுக் குறிக்கிறது.

## தோளும் மார்பும்

திருமாலின் திருமார்பு தனிச்சிறப்புடையது. திருமகள் அதில் வீற்றிருக்கிருள். தவிர கௌத்துவமாலை அவரது மார்பில் சுடர்விடுகின்றது. இதனைக் கடவுள் வாழ்த்து "மாயுடை மலர்மார்பு" என்றும் "செய்யோள் சேர்ந்த நின்மாசில் அகலம்" (பரி-2) என்றும் வருணித்தல் காணலாம்.

கௌத்துவ மணி மாலை அவர் மார்பில் சுடர்விடுவதனை "எரிமணி பிறங்கும் பூணிணை" (பரி. 1) என்ற அடி சுட்டுகிறது.

ூவைத் தவிர அவரது மார்பில் இருக்கும் பிற மாலைகள் இந்திரவில் (வானவில்) போன்றிருப்பதாக "ஓங்குயர் வானின் வாங்குவில் புரையும் பூணணி கவைஇய வாரணி நித்திலம்" (பரி 2-29-30) என்ற அடிகள் தெரிவிக்கின்றன.

கௌத்துவ மணிமாலை மற்றும் முத்துமாலை நடுவே அவர் மார்பில் மதானி (பதக்கம்) முழுமதி போல் விளங்குவதனை "நித்திலம தானி அத்தகு மதி......!" என்ற அடி குறிக்கிறது.

துளசிமாலையும், சிவந்தநிறம் கொண்ட வெட்சிமாலையும் திருமால் மார்பில் மணப்பதனை,

"எரிநகை இடைஇடு பிழைத்த
நறுத்தார்ப்
புரிமலர்த்துழாஅய் மேவல்
மார்பினோய்
(பரி. 13)

என்ற பாட்டுச் சுட்டுகிறது. தேன் ஒழுகும் துளசிமாலை என்பதனை "கள்ளணி பசுந்துளபினை" என்ற தொடரில் 15ஆம் பாட்டு வருணிக்கிறது.

## திருவாய்

திருமாலின் வாய் செந்தாமரை மலரைப் போல்வது.

"..............................தாமரை
அடியும் கையும் கண்ணும் வாயும்
(பரி: 13)

என்ற அடி இதற்குச் சான்று. அன்பர்கள் மேல்கொண்ட அருளால் அவரது திருவாய் வேத ஒலியையும், சங்கொலியையும் எழுப்பும்; கோபம் கொண்ட போது அத்திருவாய் இடிபோல் ஒலிக்கும் என்பதனையும்,

"வலம்புரி வாய்மொழி
அதிர்புவான் முழக்குச் செல்
அவை நான்கும் உறழும் அருள்
செறல் வயின் மொழி
(பரி: 13:44-45)

என்ற பாட்டடிகள் தெரிவிக்கின்றன.

## கண்கள்

திருமாலின் கண்கள் தாமரை மலர்கள் போல்வன என்ற ஏழு பாடல்களும் குறிக்கின்றன. அவரது சிவந்த அழகிய கண்களை செருஅச் செங்கண் (பரி:13) எனவும், குற்றமற்றவை அக்கண்கள் என்பதனை "செயிர்தீர் செங்கண் (பரி. 4) எனவும் அவை தெரிவிக்கின்றன. அவரது கண்களுக்குச் சாதாரணமான தாமரை மலர் உவமிக்கப்படவில்லை. அவரது உந்திக் கமலமாகிய தெய்வத் தாமரையே இணை என்பதனை,

நின்னில் தோன்றிய நிறை
இதழ்த்தாமரை
அன்ன நாட்டம்......" (பரி. 4)

என்ற பாட்டடிகள் மூலம் அறிய முடிகிறது.

## தலையும் முடியும்

ஆயிரம் தலைகள் கொண்ட ஆதிசேஷன் அவரது திருமுடியைக் காக்கின்ருர். ஆதிசேஷன் கண்கள் கோபத்துடன் அக்காவலைச் செய்கின்றனவாம். இதனை,

"ஆயிரம் விரிந்த அணங்குடை
அருந்தலை
தீயுமிழ் திறனோடு முடிமிசை
அணவர"

என்ற கடவுள் வாழ்த்துப் பாடல் தெரிவிக்கின்றது. அத்திருமுடி மிகவனப்புடையது என்பதனை "அணி வனப்பு அமைந்த பூந்துகில் புனைமுடி" என்ற 13ஆம் பாட்டடி குறிக்கிறது.

## வேதத்தை மேற்கோள் காட்டும் புலவர்கள்

பரிபாடலில் திருமாலைப் பாடும் அனைத்துப் புலவர்களும் வேதங்களை மேற்கோள் காட்டியே அவரது பெருமை முதலியவற்றை விவரிக்கின்றனர். ஐம்பூதங்களான தீ, காற்று, வானம், நிலம், நீர் ஆகியன அவரே; மூவேழு உலகங்களில் இருக்கும் அனைத்துயிர்களும் அவரிடத்தில் தோன்றியனவே என்கிருர் கடுவன் இளவெயினனார் என்ற புலவர்.

"மணிதிகழ் உருவின் மாஅயோயே
தீவளி விசும்பு நிலன் நீர் ஐந்து
..........................................................
மூவேழு உலகமும் உலகினுள்
மன்பதும்
..........................................................
நீயென மொழியுமால் அந்தணர்
அருமறை -(பரி. 13)

என்பது அவரது பாட்டு.

முக்தியை அளிக்கும் நின் திருவடிகள் கடவுள் தன்மை கொண்டவை. இவை அனைத்தும் முனிபுங்கவர் மட்டுமே அறியும் உபநிஷதக் கருத்துக்கள் என்கிருர், அதே புலவர் (பரி. 4)

"ஐம்பெரும்பூதங்களும் நீயே. மற்றும் சுவை, ஒளி, உறு, ஓசை, நாற்றம் என்பனவும் நீயே. இந்த மூவேழு உலகத்துயிர்களும் உன்னிடத்தில் அடக்கம். திருப்பாற்கடல் நடுவில், ஆயிரந் தலை கொண்ட ஆதிசேஷன் மேல் அறிதுயில் கொள்வோன் நீயே. கருடக்கொடி உடையவன் நீ. வேதங்களால் சொல்லப்படும் நல்ல புகழ் கொண்டவன் நீயே. காலக்கூறுபாடுகளை கடந்து காலங்களாகத் தாமே பொருந்திய திருவ்டிநிழலை உன் அன்பர்க்கு அருள்வாய். காத்தல் முதலிய ஐந்தொழில் பூண்ட அருள் உள்ளம் கொண்டவனும் நீயே."

"ஐந்துடன் முற்றிய நிழலும் நீயே
அதனால் நின்மருங்கின்று மூவேழ்
உலகமும்........
ஏவலின் முதுமொழி கூறும்
சேவலோங்கு
உயர்கொடிச்செல்வ...."

இதில் வரும் முதுமொழி என்பது வேதத்தைக்குறிப்பதாகும்.

"திருமாலே! நீ பசிய துளசி மாலையை உடையவன். நீலமலைப் போல்பவன். ஒளிமிக்கவன். ஒரு குழையை அணிந்தவன். கருடக்கொடியை ஏந்தியவன். வளைந்த கலப்பையை வைத்திருப்பவன். சங்கு சக்கரம் ஏந்தியிருப்பவன் என்று வேதம் உன் பெருமையைக் கூறுவதால் யாமும் அவற்றுள் நின் திருவடி நிழலில் வாழ்தல் எமக்கும் உண்டாகுக என்று வணங்குவோம் என்று பாடுகிருர் இளம்பெருவழுதியார்.

"கள்ளணி பசுந்துளவினைவ
கருங்குன்று அனையவை
நலம்புரீ இ அஞ்சிடர் நாம
வாய்மொழி
இதுவென உரைத்தெனம்
உள்அமர்ந்து திசைத்திறை
இருங்குன்றத்து அடியுறை
இயைகென
பெரும் பெயர் இருவரைப்
பரவுதுந்தொழுதே" (பரி: 15)

என்பது அப்பாட்டு.

## திருமாலின் அவதாரங்கள்

சங்க காலத்தில் தோன்றியதாகக் கருதப்படும் பரிபாட்டிலேயே திருமாலின் அவதாரங்கள் பலவும் கூறப்படுகின்றன. திருமாலின் தசாவதாரங்களும் பரிபாடலில் இல்லை எனினும் வராக அவதாரம், நரசிங்க அவதாரம், கூர்ம அவதாரம், கிருஷ்ணுவதாரம், வாமன அவதாரம் ஆகியவை மட்டுமே கூறப்படுகின்றன.

## வராக அவதாரம்

"ஒரு காலத்தில் வராக அவதாரம் எடுத்த திருமால் ஊழி வெள்ளத்திலிருந்து இப்பூவுலகைக் காத்ததாக புராணங்கள் கூறும். திருமாலாகிய நீ, ஆதி காலத்தில் வெள்ளத்தில் மூழ்கி எடுத்தநிலஉலகினை (பூமாதேவியை) கொம்பிலே ஏந்தித் தழுவினாய். அதனால் அந்நிலமகள் வெள்ளத்தால் சிறிதும் வருந்தவில்லை" என்கிறது கீரந்தையார் பாட்டு. (2)

"வளர்திரை மண்ணிய கிளர்பொறி
நாப்பன்
புள்ளி நிலனும் புரைபடல் அரிது

(2. 32-34) என்று வரும் இந்நிகழ்ச்சியினைக் குறிக்கும் பாட்டில் வராகம் என்பதற்குப் பதில் 'களிறு' (யானை) எனக்குறிக்கப்பட்டிருத்தல் கவனத்திற்குரியதாகும்.

## நரசிங்க அவதாரம்

பிரகலாதன் திருமாலைப் புகழ்ந்து பாடினான். அது கேட்ட அவன் தந்தை இரணியன் கடுங்கோபம் கொள்கிறன். அக்கோபத்தால் இரணியனின் உடலில் பூசப்பட்டிருந்த சந்தனக்குழம்பு காய்ந்து உதிர்கிறது. அப்பொழுது பிரகலாதனை காக்க் திருமால் தூணினின்று திடீரென்றுத் தோன்றுகிறர். இரணியன் மார்பில் காலால் உதைத்து, தன் நகங்ளால் அவனைக் கிழிக்கிரூர். இங்குக் குறிக்கப்படும் அவதாரம் நரசிங்க அவதாரமே யாகும்.

"செயிர்தீர் செங்கட் செல்வநிற்
புகழப்
புகைந்த நெஞ்சிற் புலர்ந்த சாந்திற்
பிருங்க லாதன் பலபல பிணிபட
வலந்துழி, மலர்ந்த நோய்கூர்
கூம்பிய நடுக்கத்
தலர்ந்த புகழோன் ருதை யாகலின்
இகழ்வான் இகழா நெஞ்சின
னாகநீ யிகழா
நன்ற நட்டவவ னன்மார்பு
முயங்கி
ஒன்ரு நட்டவ னுறுவரை மார்பிற்
படிமதஞ் சாம்ப வொதுங்கி
இன்ன வின்னரொ டிடிமுரசியம்ப
வெடிபடா வொடிதூட்டடியொடு
தடிதடிபலபடவகிர்வாய்ந்த
வுகிரினை (பரி: 4 10-21)

என்பது அப்பாட்டு.

## கூர்ம அவதாரம்

தேவர்களும் அசுரர்களும் திருப்பாற் கடலை கடைந்த பொழுது திருமால் ஆமை வடிவம் எடுத்து (கூர்மம்) தன் கழுத்தால் மகாமேருமலையைத் தாங்கினார் என்பது புராண வரலாறு.

திகழ்ஒளி முந்நீர் கடைந்தகால்
வெற்புத்
திகழ்பெழ வாங்கித்தஞ்
சீர்ச்சிரத்தேற்றி
மகர மறிகடல் வைத்து நிறுத்துப்
புகழ்சால் சிறப்பி னிருதிறத்
தோர்க்கும்
அமுது கடைய..." (பரி.திரட்டு. 1)

என்பது திருமால் கூர்ம அவதாரம் எடுத்த செய்தியை குறிப்பிடும் பகுதியாகும்.

## கிருஷ்ணுவதாரம்

இடையர்குலப் பெண்களுடன் கிருஷ்ணன் ஆடிய லீலைகள் குறிப்பிடப்படுகின்றன. கிருஷ்ணன் என்னும் பெயர் பரிபாடலில் வெளிப்படையாகக் கூறப்படவில்லை. எனினும் புலவர் பாடும் அடிக்குறிப்பினால் இவ்வடிகள் குறிப்பது கிருஷ்ணஅவதாரமே என்று உய்த்து உணரலாம்.

"இடவல மேவல கோவல காவல
(பரி. 3)
கூந்தல் என்னும் பெயரோடு
கூந்தல்
எரிசினங் கொன்ரேய்" (பரி. 3)

என்று வரும் அடிகள் இதற்குச்சான்று.

## முடிவுரை:

சங்கத்தமிழ் வாக்கியங்களில் திருமால், மாயோன் என்ற பெயர்கள் மகாவிஷ்ணுவின் பெயர்களாக உள்ளன. தொல்காப்பியர் மாயோன் என்றே குறிப்பிடுவார். சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்பே தமிழ் நாட்டில் திருமால் வழிபாடு சிறப்புற்றிருந்தமையை அறிந்தோர் பெரிதும் மகிழ்வோர் என்பதில் ஐயமில்லை.

---

## அஷ்டாங்க யோகம்

1. இமயம் - தீயவற்றை நீக்குதல்.
2. நியமம் - நற்காரியங்களைச் செய்தல்
3. ஆசனம் - அமரும் நிலை
4. பிராணுயாமம் - மூச்சையடக்குதல்
5. பிரத்யாகாரம் - புலன்களையும் மனத்தையும் தடுமாற்றத்தினின்றும் பின் வாங்குதல்.
6. தாரணை - மனத்தை கடவுள்பால் செலுத்துதல்.
7. தியானம் - ஆன்மீகத் தொடர்பு.
8. சமாதி - ஆன்மீக அனுபவம்.

திரு. கே. ராஜசேகர் - திருச்சி.

# ஒளிர்ந்தது ஞானதீபம்



திகழும் சனவரி பன்னிரண்டு
தேசிய இளைஞர் நன்னாளாம்!
நிகரிலா அத்வைத அறிவொளியை
நானிலம் பரப்பிய ஞானதீபம்
மகத்துவ இளைஞர் உள்ளத்தில்
மாபெரும் விழிப்பைத் தோற்றுவித்த,
புகழ்சீர் விவேகா னந்தர்தம்
பிறந்த பொன்னாள் கொண்டாட்டம்

தன்னல மின்மை வளர்ந்தோங்க
தாயின் தூய்மை வழிகாட்டும்!
தன்னம் பிக்கை செழித்தோங்க
தயாள குணமே களிப்பூட்டும்!
நன்ன டத்தை கொண்டோங்க
நல்லவ ரிணக்கம் ஒளியூட்டும்!
தன்னிகர் விவேகா னந்தர்தம்
தத்துவ நெறியே அருளூட்டும்!

பொங்கும் உவகை பூத்திடவே,
பயத்தை மனத்தில் அகற்றிடவே,
"எங்கே? பிரம்ம இராட்சசன்,"
என்றே கூறி மரமேறிச்
சிங்க முழக்கங் காட்டிநின்றான்,
சிறுவன் நரேந்திரன் இளவயதில்!
தங்கத் தலைவன் நரேந்திரனின்
தீரச் செயலை ஊரறியும்!

உடலை வளர்க்கும் விளையாட்டு
உயர்ந்த மனத்தின் கருவூட்டம்
சுடரும் ஒளியை உடல்பெறவே
சுகந்த தியானம் உறுதுணையாம்!
திடமாய் வாழ உடற்பயிற்சி
தினமும் ஏற்றார் தவறாது!
இடர்படு உயிர்கள் துயர்நீக்கும்
அன்பின் உருவம் நரேந்திரனே!

தோன்றிற் புகழோடு தோன்றியவர்
தூயோன் விவேகா னந்தராவார்!
ஈன்ற தாயும் பெரிதுவக்க
உயர்ந்த சீர்த்தி தாம்பெற்றார்

ஆன்ற பயணம் தொடங்குமுன்னர்
அமைதியாய்க் குமரியில் தவமேற்றார்
சான்றாய் நின்று உலகிற்கு
சமரச நெறியைப் பரப்பிவந்தார்!

ஆத்ம ஞான நிதித்திரளை
அமெரிக் காவில் நல்கிவிட்டு,
ஈத்து வக்கும் இன்பத்தை
உவந்தே நமக்குக் கொடுக்கின்ற
காத்துப் போற்றும் செல்வத்தை
களிப்புடன் பாரதம் கொண்டுவந்தார்
பூத்த பிரம்ம சத்தியத்தைப்
பாரில் பரப்பிப் பேர்பெற்றார்!

ஒளிதரு குருவாய் மாண்பேற்றார்
இராம கிருஷ்ண பரமஹம்சர்!
பழிதீர் செயல்கள் புரிதற்குப்
பகவத் கீதை படியுங்கள்!
விழிமின் எழுமின் உழைமினென
உயர்ந்த நல்வழி நமக்களித்த
எழிலுறு சீடராய் விளங்கிநின்றார்
உத்தமர் விவேகானந்தரென்பார்!

உண்மை உள்ள இடங்கண்டால்
உள்ளம் தூய்மை தாமேற்கும்!
எண்ணம் வாக்கு செயல்களிலே
ஏற்றம் கொண்டோன் உயர்வடைவான்
கொண்ட கடவுள் பக்தியாலே
குறைவிலா வாழ்வு யாம்பெறுவோம்
தொண்டர் விவேகா னந்தர்தம்
தூய வழியில் சென்றுயர்வோம்!

--அருட்கவிஞர் காசி, அருப்புக்கோட்டை.

# மரமே வாழ்வின் வரம்

திரு. சு. பாலாஜிபாபு - பரமக்குடி.

பார்புகழும் பாரதத்தின்
  பெருமைக்குச் சான்ருகும்
சீர் மிக்க இலக்கியங்கள்
  சிந்தனைக்கு விருந்தாகும்
நேர்ந்தபல கலைகட்கே
  நாயகனாய் நின்று தனி
நீர்தந்து காற்ருேடு
  நிறைவாக்கும் மரங்கள்தானே!

உச்சிவெயில் கொடுமைதன்னை
  உயர்குடையாய் தான்காக்கும்
பச்சையிலைகள் வயல்களுக்கு
  பயனுள்ள உரமாக்கும்
இச்சையோடு காய்கனிகள்
  இவ்வுலகிற் குணவாக்கும்
மெச்சுமதன் தொழிலால்
  மிகுபயனே உருவாக்கும்.

நல்லிசையை நாட்டும்
  குழலிசையில் கூட்டும்
புல்லினமாம் மூங்கிலுமே
  பெருக்கும் பணப்பல்னே
முல்லையோடு மருதம்
  நெய்தல்நல் குறிஞ்சி
எல்லையிலலாச் செல்வங்கள்
  இணைகின்ற தெய்வம்.



மாலவனும் மரமிகுந்த
மலைமீது நிற்பதுவும்
வேலவனும் குன்றுதோறும்
கோயில் கொண்டதுவும்
நீலகண்டன் கடம்பவனப்
பதியில் நேர்ந்ததுவும்
சீலமிகு ஐயப்பன்
சபரிகிரி நாதனாகியதும்

பூமிதனில் மரங்கள் தானே
போற்றுதற் குரியதென்று
நாமிதனை உணரவென்று
நலமூட்டும் செய்கையன்றோ?
பூமிதனில் வெற்றிடங்கள்
பலனாக்கும் மரங்களென்று
சேமமுற வளர்த்திடுவோம்
சோர்வின்றிக் காத்திடுவோம்.

விலங்கினமும் புள்ளினமும்
வாழுகின்ற வீடாகும்
நிலமெங்கும் பசுங்கலைகள்
நிலமகளின் ஆடையாகும்
பலகாலம் மண்ணுள்ளே
புதையுண்ட மா மரங்கள்
நிலக்கரியாய் வைரமதாய்
நீணிலத்தில் தோற்றமாமே!

மருந்துக்கு மூலிகையாய்
விருந்தாக்கும் தேன்சுவையாய்
சிறந்தோங்கும் உயிர்களுக்கே
சிறப்புற்ற தாயாகும்
வேரோடி விண்முட்ட
விளைந்திட்ட மரத்தாலே.
மாறுது மண்ணரிப்பால்
மண்ணுக்கும் மகிமையாமே!

சித்தர்கள் தத்துவங்கள்
சிறந்ததுவும் மரத்தடியில்
புத்தர்தம் ஞானத்தோடு
போதனையும் மரத்தடியில்
எத்தனையோ வரலாறு
எல்லாமும் மரத்தடியில்
சித்த மகிழ் ராமகாதை
வித்தானசெயல் மரத்தடியில்

வரங்கள் தந்ததினால்
வாழ்விழந்தோர் பலருண்டு
வர பலமும் தவ பலமும்
மரத்தடியில் நிகழ்ந்ததுண்டு
உரமாகி உயர்வாகி
உயிர்காக்கும் மரமேயுண்டு
சிரந்தாழ்த்தி வணங்குகின்றேன்
சீர்மரமே வாழ்கவென்று

அறமோங்கு நல்வினைக்கு
ஆதாரமாகி நிற்கும்
நறுமணமும் நானிலத்தில்
நலமுறவே நிதம் சேர்க்கும்
உறுதுணையாம் வாழ்வில்
ஒளிமிக்கக் கண்களாகி
செறிவூட்டும் சிறப்பாலே
மரமே வாழ்வின் வரமாமே!

அழுகின்ற குழந்தைக்கு
அன்னையின் பரிவேபோல்
தழைக்கின்ற மரங்கள்
தரணிக்குத் தாயாகும்
தொழத்தக்க மரமென்று
தொழவைத்தான் கிரிதரனே
விழிகாக்கும் இமைபோல
விரைந்து நாம் காப்போமே!

பட்டமரமென்று இப்புவியில்
பழிப்போர் யாரேவுண்டு?
பட்டபின்னும் பயனாகும்
படிப்பினையே அனுபவமாம்
மட்டில்லா தியாகமிதை
மாந்தர் உணர்ந்தாலே
அட்டியின்றி செல்வம்
அவனிதனில் மிகவாமே!

நானிலமும் நலமுறவே
நல்லருளே புரிகின்றாய்
தானமுடன் தியாகமுமே
தருமமென்று நிலைத்தாய்
கானமுடன் கல்விமிகக்
கலைவளர வைத்தாய்
ஊனமின்றி உனைக்காக்க
உள்ளமெனக் களித்தாய்

சாதிமத பேதமின்றி
சாதனைகள் செய்யும்
ஏதுனக்கு உவமை
எப்பணிக்கும் அமைவாய்
வீதிதோறும் நீயிருக்க
வீசுதென்றல் இனிமை
நீதிகாட்டி நிதியளிக்கும்
நின்பணியே மேன்மை.

நீடுயரும் மரக் கூட்டம்
காடுகளே களிப்பூட்டும்
பாடுபட பலன்கூட்டும்
பாரெங்கும் செழிப்பூட்டும்
நாடுயர நலன் நாட்டும்
நற்கவியாய் தேனூட்டும்
மாடு மிக வாகிவரும்
மரம் வாழ்வின் வரமாமே.

# வேதம் மறந்து விட்டது

பரனூர் வெங்கட்ராம சிரௌதிகள் - சென்னை.

நமது பாரதத்திலுள்ள அனைத்து தர்ம சாஸ்திரங்களுக்கும் ஸ்ம்ருதிகளுக்கும், புராணங்களுக்கும் ஆதாரம் வேதம் தான் என்பது அறிஞர்கள் அறிந்த விஷயம்.

நாம் வேதத்தை உச்சரிக்கையில் எந்தெந்த அக்ஷரங்கள் எங்கெங்கே பிறந்து வெளிப்படுகிறது என்பதையெல்லாம் விஞ்ஞான ரீதியாக சிக்ஷாசாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. நமது உதட்டில் வந்து காது படக்கேட்கிற வேத சப்தத்திற்கு வைகரீ என்று பெயர். அதற்கு மூலசப்தமான "பரா" மூலாதாரத்தில் நாபிக்குக் கீழே உற்பத்தியாகிறது. அது 'வைகரி' யாக காதில் கேட்பதற்கு முன்னால் "பசயந்தி", "மத்யமா' என்ற இரண்டு நிலைகளை அடைகிறது. யோக ஸித்தியில் மேலே போகப்போகதான் படிப்படியாக 'மத்யமா', 'பச்யந்தீ' 'பரா' முதலிய சப்தங்களைக் கேட்க முடியும். யோகேச்வரர்களான ரிஷிகள் 'பரா' வாக்கையே கேட்கக் கூடியவர்கள். அவர்கள், எந்த 'பரா' வாக்குகள் 'வைகரி'யாக வெளிவரும் போது தேவதாப் ரீதியும் லோகக்ஷேமமும், ஆத்மாபிவ்ருத்தியும் உண்டாகுமோ அப்படிப்பட்ட பரா வாக்குகளையே அகண்ட ஆகாசத்திலிருந்து கிரஹித்து நமக்கு வேத மந்த்ரங்களாக அளித்திருக்கிறார்கள். மந்த்ரங்களைப் பொருத்தமட்டில், பாஷை அர்த்தம் எல்லாம் முக்கியமல்ல. சப்த மாத்திரத்தினாலேயே பலன் ஏற்படுகிறது என்பது தான் வேத மந்த்ரங்களின் விசேஷம். வைதிக மந்த்ரங்களுக்கு சப்தத்தினாலேயே பெருமை. மேலேயுள்ளதைக் கூறியவர்கள் காஞ்சி பரமாசார்யாள் அவர்கள்.



அதனால்தான் வேதத்தைக் காப்பாற்றுவது மிக முக்கியமென்றும், அது ப்ராம்மணனுடைய கடமையென்றும் விதிக்கப்பட்டிருக்கிறது. வேதத்தைக் காப்பாற்றுவதற்கென்றே அவர்கள் படைக்கப்பட்டிருக்கிறார்கள் என்றும் கூறப்பட்டிருக்கிறது. அதனால்தான் போஜ மஹாராஜா, தனது காவியத்தில் தான் செய்யும் நமஸ்காரங்களெல்லாம் வேதத்தைக் காப்பாற்றிவரும் அந்தணர்களையே சேரும் என்று கூறுகிறார். சில விஷயங்களை, சில பல ஒழுங்குமுறை, கட்டுப்பாடு ஆகியவற்றுடன் செய்து வந்தால்தான் அவை நல்ல பலனைக்கொடுக்கும். சிலருக்கு அப்படிப்பட்ட கடுமையானக் கட்டுப்பாடுகளை விதித்து அவர்களிடம் வேதத்தைக் காப்பாற்றும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது.

காலங்காலமாக அந்தணர்கள் வேதத்தைக் காப்பாற்றுவதையே தங்கள் முதற்கடமையாகக் கருதி அதை அத்யயனம் செய்து வந்தார்கள். வேதத்தை

தினமும் கோயில்களில் பாராயணம் செய்து வந்தார்கள். சுவாமிவீதி உலா வரும் போது சுவாமிக்குப் பின்னால் வேதத்தை ஓதிக் கொண்டே செல்வார்கள். சிறுசிறு கிராமங்களில்கூட வேத ஒலி கேட்டுக்கொண்டேயிருக்கும். அந்த வேத ஒலி அலைகள் காற்றில் பரவி அதனுடைய சக்தியினால் மக்களின் மனதில் பாப எண்ணங்கள் அதிகம் தோன்ருமல் இருந்தது. ஆகவே இன்று காணப்படும் கணக்கற்ற கொலைகளும், கொள்ளைகளும் அப்பொழுது அதிகம் நடந்ததில்லை. சுமார் அறுபது வருஷங்களாக இப்படி வேதங்களை ஓதுவதும் வேதத்தைக் காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணமும் மறந்துவிட்டது. வேதம் மறக்கப்பட்டதால் மக்களுடைய மனதில் மறம் வளரத்தொடங்கியது. அதனுடைய விளைவுதான் இன்று காணும் அமைதியின்மை, வன்முறைகள், அரசாங்கமே கட்டுப்படுத்த முடியாத நபர் கடத்தல்கள் ஆகியவை.

நல்ல ஆஸ்திகர்கள் கூட வேதத்தைப் பற்றி அதிகம் நினைப்பதில்லை. முன்பெல்லாம் நவராத்ரி போன்ற விசேஷ காலங்களில் வேதபாராயணம் இல்லாமல் பூஜை நடக்காது. வேதத்தின் பெருமையை அவர்கள் மறக்கவில்லை. ராமாயணம் கூறுகிறது: வேதத்தினால் அறியப்படும் பரம்பொருள் தசரதருக்குப் புத்திரனாக அவதரித்தவுடன் வேதமும் ராமாயண ரூபத்தில் அவதரித்து விட்டது, வேதத்தின் ஸ்வரூபமான ராமாயணத்திற்கே நலனை அளிக்கும் சக்தி இருக்கிறதென்ருல் ராமாயணத்தின் மூலப்பொருளான வேதத்திற்கு எவ்வளவு சக்தி இருக்கும். ஆனால் கலியின் தோஷத்தினால் நாம் அதன் சக்தியை மறந்து வருகிரோம். வேதாத்யயனம் செய்வதை மறந்துவிட்டோம். முன்பெல்லாம் வேதத்தின் பெருமையை உணர்ந்து சமூகத்திலுள்ள அனைத்துப் பிரிவினரும் வேத பாடசாலை நடத்தி வந்திருக்கிருர்கள். காரணம், உபநயனம் ஆகாத ஸ்த்ரீகளுக்கோ அல்லது மற்றவருக்கோ வேத அத்யயனம் செய்வதை விதிக்கவில்லை என்றிருந்தாலும் வேதம் எல்லாருக்கும் பொதுவானது என்ற எண்ணம்தான்.

இன்றும் சிலருக்கு வேதத்தைக் காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது. ஆனால் அவர்கள் நிறைய பணம் செலவழித்து வித்யார்த்திகளை அத்யயனம் செய்விக்க முயல்கிருர்களே தவிர தாங்களோ தங்கள் பிள்ளைகளோ கொஞ்சமாவது அத்யயனம் செய்யவேண்டுமென்று நினைப்பதில்லை. அத்யயனம் செய்யும் பொறுப்பை பிறர் மீதே விடாமல் தாங்கள் அந்தப் பொறுப்பை ஏற்ருல், 'எவ்வளவு பணம் செலவழித்தாலும் வேத அத்யயனம் செய்ய மாணவர்கள் கிடைக்கவில்லையே' என்ற குறை ஏற்படாது. ஒவ்வொருவரும் ஒருசில முக்கியமான பூஜைக்கு வேண்டியவை தர்ப்பணத்திற்கு வேண்டியவை ஆகியவற்றையாவது அத்யயனம் செய்தால்தான் ஸமூகத்தில் அதற்கு ஒரு அந்தஸ்து இருக்கும். அப்பொழுது நிறைய மாணவர்களும் கற்க முன்வருவார்கள். வேதம் மறக்கப்பட்டுவிட்டது என்ற நிலை ஏற்படாது. வேதத்தை நாம் மறந்தோமானால் நமது மனம் உலகியல் விஷயங்களிலேயே சுழன்று கொண்டிருக்கும். ஆன்மநெறியைப் பின்பற்றும் எண்ணம் ஏற்படவே ஏற்படாது. அதன் விளைவு அமைதியின்மைதான். ஆகவே நாம் ஒவ்வொருவரும் கொஞ்சமாவது வேத அத்யயனம் செய்து வேதத்தைக் காப்பாற்ற வேண்டும்.

*

## கற்பக விருக்ஷங்கள்

'கல்பம்' என்ருல் எண்ணம் அல்லது விருப்பம். நாம் விரும்பியதை தரும் மரங்கள்தான் கற்பக விருக்ஷங்கள். 'கற்பக விருக்ஷம்' என்பது தேவலோகத்தில் இருக்கும் மரம். அவை மொத்தம் ஐந்து. அவை: மந்தாரம், பாரிஜாதம், ஸந்தானம், கல்ப விருக்ஷம், ஹரிசந்தனம் என்பன.

பாற்கடலைத் தேவர்கள் அமுதம் வேண்டி கடைந்தபொழுது இந்த ஐந்து கல்பதருக்களும் அதில் தோன்றின.

ஆதாரம்:- ரகுவம்ஸ காவ்யம்

திரு. க. இராமலிங்கம் - புதுப்பேட்டை.

# ஆர்ஜித சேவை விவரங்கள்

1. **தரிசனங்கள்:**
   1. சிறப்பு நுழைவு தரிசனம் ரூ. 25-00
   2. சுப்ரபாத தரிசனம் ரூ. 50-00

   குறிப்பு: நபர் ஒருவரே அனுமதிக்கப்படுவர்.
   நேரம்: காலை 2-30 மணி

2. **சேவைகள்**
   1. அமந்த்ரஞேத்சவம் ரூ. 400/-
      1/16 சோலா (அளவு) பொங்கல்
      காலை தோமால சேவை மற்றும் அர்ச்சனை
      (இருவர் அனுமதிக்கப்படுவர்)
   2. தோமாலசேவை - காலை 3-30 மணி ரூ. 100/-
      (நபர் ஒருவர்)
   3. அர்ச்சனை காலை 4-30 மணி(நபர் ஒருவர்) ரூ.100/-

   குறிப்பு:- வெள்ளிக்கிழமைகளில் மாற்றம் உண்டு: (வெள்ளிக்கிழமைகளில் தோமால சேவை மற்றும் அர்ச்சனை) அதாவது காலை 6-30 மணிக்கு இணைத்துச் செய்யப்படும்.

   4. ஏகாந்த சேவை(நபர் ஒருவர்க்கு) ரூ. 50/-
      இரவு 10-30 மணிக்குப் பிறகு. (ஸர்வதரிசனம் முடியும் நேரத்தைப் பொறுத்து)
      (முன் பதிவு இல்லை)

3. **சிறப்பு பூஜை** ரூ. 3000/-
   (திங்கட்கிழமைகளில் மட்டும்)
   காலை 7 மணிக்கு 5 நபர்கள் அனுமதிக்கப்படுவர்.
   வஸ்த்ர பஹுமானம், 5 பெரிய லட்டுகள், 5 வடைகள்.

4. **அஷ்டதளபாத பத்மாராதன சேவை** ரூ. 3500/-
   (செவ்வாய்க்கிழமைகளில் மட்டும்)
   காலை 10 மணிக்கு. அனுமதி 5 நபர்கள்
   வஸ்த்ரபஹுமானம், 10 லட்டுகள்(பெரியன),10வடைகள்

5. **ஸகஸ்ர கலஸாபிஷேகம்** ரூ. 3500/-
   (புதன்கிழமைகளில் மட்டும்)
   காலை 5-30 மணிக்கு. அனுமதி: 10 நபர்கள்
   வஸ்த்ர பஹுமானம், 15 பெரிய லட்டுகள், 15 வடைகள், 10 அப்பங்கள், 10 தோசைகள், தத்யோதனம், புளியோதரை, சர்க்கரைப் பொங்கல், பாயஸம் (ஒவ்வொன்றும் 1/16 சோலா அளவு)

6. **திருப்பாவாடை** ரூ. 3500/-
   (வியாழக்கிழமைகளில் மட்டும்)
   காலை 5-30 மணிக்கு அனுமதி: 10 நபர்கள்
   வஸ்த்ர பஹுமானம் 15 பெரிய லட்டுகள், 10 வடைகள், 10 அப்பங்கள், 10 தோசைகள், 10 ஜிலேபிகள், 10 தேன் துளைகள், புளியோதரை, பாயஸம் (ஒவ்வொன்றிலும் 1/16 சோலா அளவு)

7. **அபிஷேகம்:**
   (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்)
   காலை 3-30 மணிக்கு.
   1. பூராபிஷேகம் ரூ. 500/-
      அனுமதி நபர் ஒருவர் மட்டும்
      2 வடைகள், 2 லட்டுகள்
   2. புனுகு பாத்திரம் ரூ. 200/-
      அனுமதி நபர் ஒருவர் மட்டும்
      2 வடைகள், 2 லட்டுகள்
   3. கத்தூரி பாத்திரம் ரூ. 100/-
      அனுமதி நபர் ஒருவர் மட்டும்
      ஒரு லட்டு, ஒரு வடை.

4. நிஜபாத தரிசனம் ரூ. 50/-
அனுமதி ஒரு நபர் மட்டும்
(பிரஸாதங்கள் இல்லை)

8. **வெள்ளிக்கிழமைகளில்** ரூ. 200/-
தோமாலையும் அரச்சனையும் இணைந்தது.
அனுமதி நபர் ஒருவர் மட்டும்.
காலை 6-30 மணிக்கு

9. **ஸகஸ்ர தீபாலங்கார சேவை** ரூ. 500/-
(நாள் தோறும் காலை 5-30 மணிக்கு)
(கோயில் அரங்கிற்கு வெளியில்)
அனுமதி 5 நபர்கள் மட்டும்.
வஸ்த்ர பஹுமானம் மட்டும்.

10. **உத்ஸவங்கள்**
(தினந்தோறும்)
அ. கல்யாணோத்ஸவம்[.........மட்டும் இல்லை] ரூ. 2000/-
(10 நபர்கள் மட்டும்) காலை 10 மணிக்கு.
வஸ்த்ர பஹுமானம், இரவிக்கைத் துண்டு ஒன்று.
15 பெரிய லட்டுகள், 15 வடைகள், 10 அப்பங்கள்,
10 தோசைகள், சர்க்கரைப் பொங்கல், புளியோதரை,
தத்யோதனம் (ஒவ்வொன்றிலும் 1/16 சோலா அளவு)

ஆ. சிறப்பு கல்யாணோத்ஸவம் ரூ. 500/-
(காலை 10 மணிக்கு)
வஸ்த்ர பஹுமானம்,
ஒரு பெரிய லட்டு, ஒரு வடை

இ. ஆர்ஜித பிரம்மோத்ஸவம் ரூ. 500/-
(அனுமதி 5 நபர்கள் மட்டும்)
(1) பெரிய சேஷவாகனம்
(2) வெள்ளி கருட வாகனம்
(3) வெள்ளி அனுமன் வாகனம்
மேற்கூறிய வாகனங்கள் தனித்தனியாகவும் நடத்தப்படும்.

ஈ. தனிப்பட்ட வாகனங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1) ஞாயிற்றுக்கிழமை | - | சூர்யப்பிரபை | ரூ. 100-00 |
| 2) திங்கட்கிழமை | - | சந்திரப்பிரபை | ரூ. 100-00 |
| 3) செவ்வாய்க்கிழமை | - | சிம்ஹவாகனம் | ரூ. 100-00 |
| | | கல்ப விருக்ஷவாகனம் | ரூ. 125-00 |
| 4) புதன் கிழமை | - | அஸ்வவாகனம் | ரூ. 100-00 |
| 5) வியாழக்கிழமை | - | கஜவாகனம் | ரூ. 100-00 |
| 6) வெள்ளிக்கிழமை | - | ஹம்ஸவாகனம் | ரூ. 125-00 |
| 7) சனிக்கிழமை | - | ஸர்வ பூபாலவாகனம் | ரூ. 125-00 |

உ. டோலோத்ஸவம் ரூ. 750/-
அனுமதி: 6 நபர்கள் மட்டும் - மதியம்
1 மணிக்கு கோயிலுக்குள் உள்ள கண்ணாடி
அறையில் (ஊஞ்சல் சேவை) நடைபெறும்.
வஸ்த்ர பஹுமானம், சேஷ வஸ்த்ரம்

ஊ. வஸந்தோத்ஸவம்: ரூ. 3000/-
(நாள் ஒன்றுக்கு) (மதியம் 2 மணிக்கு)
10 நபர்கள் மட்டும் (மூன்று நாள் நிகழ்ச்சி)
6 வடைகள், தத்யோதனம், புளியோதரை,
பொங்கல், சர்க்கரைப் பொங்கல் (1/16 சோலா அளவு)
20 தோசைகள், வஸ்த்ர பஹுமானம்

11. **தெப்போத்ஸவம்** ரூ. 2500/-
(வருடாந்திர உத்ஸவம்) (5 நாள் நடக்கும்)
மாலை 6 மணிக்கு.
ஒரு நாளுக்கு அனுமதி 5 நபர்கள் மட்டும். வஸ்த்ர
பஹுமானம் மற்றும் இரவிக்கைத் துண்டு.

12. **கோயிலாழ்வார் திருமஞ்சனம்** ரூ. 3000/-
(அனுமதி 10 நபர்கள் மட்டும்) காலை 11 மணிக்கு.
வஸ்த்ர பஹுமானம், 15 வடைகள், 15 லட்டுகள், 10 அப்

பளங்கள், 10 தோசைகள், மற்றும் அன்ன ப்ரஸாதங்கள். வருடத்திற்கு நான்கு நாட்கள் நடைபெறும். யுகாதி, ஆனிவார ஆஸ்தானம், பிரம்மோத்ஸவம், வைகுண்ட ஏகாதசி ஆகிய நிகழ்ச்சிகளுக்கு முன்பு, செவ்வாய்க் கிழமைகளில் நடைபெறும்.

13. **பவித்ரோத்ஸவம்** ரூ. 5000/-

மூன்று நாட்களுக்கு நடைபெறும். அனுமதி 5 நபர்கள் மட்டும். மூன்று நாள் நிகழ்ச்சி. முதல் நாள் பிரஸாதம் கிடையாது. இரண்டாம் நாளன்று 30 தோசைகள், பொங்கல்மட்டுமே. மூன்றும் நாளன்று 30 தோசைகள், பொங்கல் மட்டுமே. வஸ்த்ர பஹுமானம், 6 வடைகள்.

குறிப்பு:- வருடத்தில் மூன்று நாட்கள் நடைபெறும். முதல் நாள் தோமால சேவைக்கு இருவர், இரண்டாம் நாள் அர்ச்சனைக்கு இருவர், முன்றும் நாள் ஏகாந்த சேவைக்கு இருவர் அனுமதிக்கப்படுவர்.

14. **புஷ்பயாகம்** ரூ. 3500/-

(அனுமதி 5 நபர்கள் மட்டும்) (காலை 6 மணிக்கு) வஸ்த்ர பஹுமானம், 5 கிராம் எடையுள்ள தங்கக் காசு, (பிரம்மோத்ஸவத்திற்குப் பிறகு வருடத்தில் ஒரு முறை ஸ்ராவண நட்சத்திரத்தன்று நடைபெறும்.)

15. **அபிதேயக அபிஷேகம்** ரூ. 2000/-

(ஒருநாள் மட்டும்) அனுமதி 5 நபர்கள் மட்டும். வருடத்தில ஒருமுறை ஜூன் மாதத்தில் மூன்று நாட்களுக்கு நடைபெறும். காலை 8 மணிக்கு.

16. **அன்ன பிரஸாதம்**

1/4 (சோலா அளவு)

**ஸெருபு கட்டணங்கள்**

(ஒரு நாள் முன்னதாக)

1. தத்யோதனம் ரூ. 75/-
2. புளியோதரை ரூ. 100/-
3. பொங்கல் ரூ. 110/-
4. சர்க்கரைப் பொங்கல் ரூ. 135/-
5. ஸாகராபாத் ரூ. 150/-
6. பாயஸம் ( இரண்டு நாட்களுக்கு முன்பு) ரூ. 125/-
7. ஸீரா ரூ. 300/-

**பணியாரங்கள்**

1. அப்பம் படி ரூ. 250/-
2. வடை படி ரூ. 350/-
3. போளி படி ரூ. 350/-
4. தோசை படி ரூ. 350-
5. லட்டு படி ரூ. 750/-
6. தேன் துளை ரூ. 350/-
7. ஸுகியம் ரூ. 300/-
8. ஜிலேபி படி ரூ. 600/-

குறிப்பு:-நிவேதனத்திற்குப் பிறகு பிரஸாதங்களைப் பெற்றுச் செல்வதற்கான ஏற்பாடுகளை கிருஹஸ்தர்களே மேற்கொள்ள வேண்டும்.

17. **அறக்குழு நிதி சேவைகள்**

1. கல்யாணோத்ஸவம் (10 நபர்கள்) ரூ. 20,000/-
2. சிறப்பு கல்யாணோத்ஸவம் (5 நபர்கள்) ரூ. 5000/-
3. பிரம்மோத்ஸவம் (5 நபர்கள்) ரூ. 5000/-
4. ஊஞ்சல் சேவை (டோலோத்ஸவம்) (6 நபர்கள்) ரூ. 7500/-
5. அமந்த்ரணோத்ஸவம் (2 நபர்கள்) ரூ. 4000/-
6. தோமாலசேவை (நபர் ஒருவர்) ரூ. 1000/-
7. ஸகஸ்ரநாம அர்ச்சனை (நபர் ஒருவர்) ரூ. 1000/-

'எக்ஸிக்யூட்டிவ் ஆபிஸர்' தி.தி. தேவஸ்தானம் திருப்பதி' எனும் பெயரில் நாட்டுடமையாக்கப்பட்ட எந்த வங்கி மூலமாகவும் பெறப்பட்ட கேட்பு காசோலையினை (Demand Draft) அனுப்புமாறு கிருஹஸ்தர்கள்/பக்தர்கள்/நன்கொடையாளர்கள் கேட்டுக்கொள்ளப்படுகின்றுர்கள். மேற்கூறிய சேவை

கள், கிடைக்கப் பெறும் வட்டித் தொகையினைக்கொண்டு, உத்ஸவ நாட்கள் தவிர்த்து வருடத்தில் ஒரு நாள் அவர்கள் விரும்பும் நாளன்று நடத்தப்படும்.

குறிப்பு:- பதிவாக்கப்படும் கிருஹஸ்தர்கள்/பக்தர்கள்/ நன்கொடையாளர்கள் பொறுத்து மேற்கூறிய சேவைகள்/மற்றும் உத்ஸவங்களுக்கான சீட்டுக்கள் விற் கப்படும். கட்டணத்தொகையினை "எக்ஸிக்யூட்டிவ் ஆபிஸர், தி.தி. தேவஸ்தானம் திருப்பதி" எனும் பெயரில் தேசியம்யமாக்கப்பட்ட ஒரு வங்கி மூலம் பெறப்பட்ட கேட்பு காசோலையினை பேஷ்கார்,(திருலைக்கோயில்) திருமலை-517504 எனும் முகவரிக்கு குறைந்த பட்சம் 60 நாட்களுக்கு முன்பேயே அனுப்பி வைக்கப்பட்டால், சேவைகளுக்கான உறுதிமடலை ஆர்ஜிதம் அலுவலகத்திலிருந்து முன்கூட்டியே அனுப்பிவைக்கப்படும். விஜயா வங்கி மூலமாக மட்டும், ஒரு நாளுக்கு முன்பேயே நேரிடையாக பணம் செலுத்தினால், முதலில் வருபவர்களுக்கு முதல் சேவை என்ற முறையில் சேவைகள் நடத்தப்படும்.

திருமலையில் தங்கு வசதிகளுக்காக, தேசியமயமாக்கப்பட்ட வங்கி ஒன்று மூலமாக ரூ. 100/-க்கு 'எக்ஸிக்யூட்டிவ் ஆபிஸர், தி.தி.தேவஸ்தானம், திருப்பதி' எனும் பெயரில் எடுக்கப்பட்ட 'கேட்பு காசோலை'யினை 30 நாட்களுக்கு முன்கூட்டியே 'உதவி செயலாட்சித்தலைவர், (வரவேற்பு-I) தி.தி. தேவஸ்தானம், திருமலை-517504' எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும்.

முழு விபரங்களுக்குத் தயவுசெய்து செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி-517501 அல்லது பேஷ்கார், திருமலைக் கோயில், திருமலை-517504 எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

குறிப்பு:-ஆர்ஜித சேவைகளுக்கான கிருஹஸ்தர்கள், பக்தர்கள், நன்கொடையாளர்கள் யாவரும் கோயிலுக்கு 'வைகுண்டம்' க்யூ கட்டிடத் தொகுதி வழியாக அனுமதிக்கப்படுவர்.

## நித்ய அபிஷேக ஸேவை

யாத்திரிகர்களின் வசதிக்காக திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீகபிலேஸ்வரசுவாமி கோயிலில் புதியதாக "நித்ய அபிஷேக ஸேவை" ஒன்று புகுத்தப்பட்டுள்ளது.

இந்த ஸேவையில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள் ஆண்டொன்றுக்கு ரூ.42/- செலுத்துதலோ அல்லது தேசீயமயமாக்கப்பட்டுள்ள வங்கி ஏதேனும் ஒன்றில் "செயலாட்சித்தலைவர், தி.தி. தேவஸ்தானத்தானம், திருப்பதி" என்னும் பெயரில் ரூ. 500/- முதலீடு செய்த்லோ வேண்டும். முதலீடு செய்யப்பட்ட தொகைக்குக் கிடைக்கப்பெறும் வட்டித்தொகையினைக் கொண்டு தொடர்ந்து கிருஹஸ்தரின் பெயரில் நிரந்தரமாக ஸேவை நடத்தப்பெறும். பெரியவர்கள் இருவர் வருடத்திற்கு இருமுறை இச்ஸேவைக்கு அனுமதிக்கப்படுவர்.

நிரந்தரமாக தொடர்ந்து இச்ஸேவையினை நடத்த விரும்புவர் முதலாண்டுக்கான ரூ.42/- செலுத்துவதோடு ரூ. 500/- செலுத்துதல் வேண்டும்.

திருப்பதி நகரத்திலிருந்து 2 கி.மீ. தொலைவில் ஸ்ரீகபிலேஸ்வரசுவாமி கோயில் உள்ளது. கோயில் வளாகத்திற்குள் ஆழ்வார் தீர்ததம் எனும் திருக்குளம் ஒன்றுள்ளது. காலையிலும் மாலையிலும் அபிஷேகம் நாளும் இக்கோயிலில் நடைபெறுகின்றது.

செயலாட்சித் தலைவர்
திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

***

# நெஞ்சில் ஓர் இடம்

"பெண்ணுக்கு இடங்கொடுத் தால் தலைமீது ஏறி உட் கார்ந்து கொள்வாள்" என்று பெரியவர்கள் சொல்வார்கள். அதன் உண்மையான பொருள றியாமல் பெண்ணை அடக்கி யாள ஆரம்பித்தனர். அடக்கு முறை பல வடிவங்கள் எடுத்த தால்தான் 'பெண்கள் விடுதலை' எனும் இயக்கமே ஏற்பட்டது.

பெரியோர் சொன்னதில் உண்மையான பொருள் என்ன?

பெண்களுக்கு இடம் - அதா வது இடப்பாகத்தைக் தரக் கூடாது என்பதுதான் அது. பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளும் நேரத்தில் ஆணுக்கு வலப்பக்கமாகப் பெண்ணை உட்கார வைத்துத்தான் மாங் கல்யம் கட்டுவார்கள். மாங் கல்யம் கட்டும் போது ஆணுக்கு வலப்புரத்தில் தான் பெண் இருக்க வேண்டும் என்ற நியதியைக் கடைப்பிடிக் கத்தான் 'இடம்' தரக்கூடாது என்று பெரியோர் கூறினர்.

இடபாரூடரான சிவபெரு மான் உமாதேவியாருக்குத் தன் இடப்பாகத்தைத்தான் தந்தார். அதனால்தான் சிவனாரின் இடப்பாகத்திற்கு ஆற்றல் வந் தது என்பார்கள்.

தமர குரங்களும் காரிருட்பிழம்பு
மெழுகிய அங்கமும் பார்வையிற்
பொருந்து
தமிலுமிழ் கண்களுங் காளமொத்த
கொம்பும்
உளகதக்கடமாமேல்
வீரங்கெடாமல் எருமைக்கடா வின் மேல் ஆரோகணித்து வந்து எமனை உதைத்தது இடது காலால்தான். முய லகனை மிதித்ததும் இடது காலால்தான்.

"தூ சுடைய அகலல்குல் தூ
மொழியாள் ஊடல்
தொலையாத காலத்தோர்
சொற்பாடாய் வந்து
தேசுடைய இலங்கையர்கோன்
வரையெடுக்க அடர்த்தது"

அவரின் இடது காலால்தான். தவறு செய்த சந்திரனையும் இடது காலால்தான் தேய்த் தார். இதனைத்தான் அருணகி ரியார்.

"...பொழிகார் முகிற்சி ணைந்த
யமராஜ னுட்கு அன்று
பொருதா ளெடுத்த தந்தை
மகிழ்வோனே"

என்று கூறிப்பிடுகிறார்.

அந்த இடப்பாகமே சிவனா ரின் மேனியில் உமையாம்பிகை யின் பங்காகிவிட்டது.

"அரையாடு நாகம் அசைத்தபிரான்
அவனியின் மேல்
வரையாடு மங்கைதன்பங் கொடும்வந்
தாண்டதிறம்..."

என்றும்,

"மலைமகளை யொருபாகம்
வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தா லவன் சடையிற்
பாயுமது என்னேடி"

என்றும்,

"சோதியே சுடரே சூழொளி
விளக்கே
சுரிகுழற் பனைமுலை
மடந்தை பாதியே..."

என்றும் மணிவாசகர் பாடி மகிழ்கிறார்.

"திருவுடையார் இடம் சேர்பவளே"

என்றும்,

"கறுக்கும் திருமிடற்றான்
இடப்பாகம் கலந்தபொன்னே"
"அமுதீசர் ஒரு பாகம் அகலாத
சுகபாணி"

என்றும் அபிராமிப் பட்டர் பாடி கமகிழ்கிறார்.

உமைக்கு இடப் பாகத்தை அளித்த பிறகுதான் கங்கைக்குத் தன் சடா முடியில் இடங் கொடுத்தார். அதனால்தான் பெண்ணுக்கு இடங்கொடுத்தால் தலையில் உட்கார்ந்து கொள் வார்கள் என்று சிலர் சொல் வார்கள்.

இதைத்தான் அருணகிரியார்,

"பாதிமதி நதி போது மணிசடை
நாத ரருளிய குமரேசா"

என்றும்,

"நமனை யுயிர் கொளு மழலினிணை
கழல் நதிகொள் சடையினர்
குருநாதா"

என்றும் பாடி மகிழ்கிறார்.

இராமபிரானும் சீதாப்பிராட் டியைத் தன் இடப்பாகத்தில் தான் கொண்டிருக்கிறார். ஸ்ரீ நருஸிம்ஹனும் ஸ்ரீமகாலக்ஷ் மியை இடப்பாகத்தில் தான் கொண்டிருக்கிறார். ஏன் அப் படி?

திரு. க. இராமலிங்கம் · புதுப்பேட்டை.

ஸ்ரீராமாவதாரத்தில் ஸ்ரீராமருடன் என்றும் பிரியாமல் இருந்தவர் ஸ்ரீலட்சுமணப் பெருமாள். சீதையைத் திருமணம் செய்து கொள்வதற்கு முன்பும் - பதினான்கு ஆண்டுகள் வனவாசத்தின் போதும் இராமன் சீதையைப் பிரிந்திருந்த காலத்திலும் லட்சுமணரே இராமபிரானுக்கு உடனிருந்து பணிவிடை செய்து பெருமை பெற்ருர். தனது தம்பியான லட்சுமணருக்கு ஏற்றத்தை அளிப்பதற்காகவே இராமர் தனது வலப்பக்கத்தில் லட்சுமணரையும் இடப்பக்கத்தில் சீதா தேவியையும் வைத்தார் என்பர்.

அவ்வாறே ஸ்ரீநரசிம்ம அவதாரத்தில் பிராட்டியைவிட மிகவும் பிரியமானவன் பிரகலாதன். எனவே பிரகலாதனுக்கு தனது வலப்பக்கத்தையும் பிராட்டிக்கு இடப்பாகத்தையும் நரசிம்மன் தந்தார் என்று பெரியோர் கூறுவர்.

நாபிக்கமலத்தில் வீற்றிருக்கும் பிரமனோ கலைமகளுக்குத் தன் நாவிலே இடங்கொடுத்தார்.

"முது பழமறை விரிந் தொளி பழுத்த செந் நாவி"யில் கலைமகள் குடியிருக்கிருர் என்கிருர் குமரகுருபரர்.

விஷ்ணுவோ இலக்குமிக்குத் தன் மார்பில் இடங்கொடுத்தார்.

"பிறைதங்கு சடையானை
வலத்தே வைத்துப்
பிரமனைத் தன் னுந்தியில்
தோற்றுவித்து
கறைதங்கு வேல் தடங்கண்
திருவை மார்பில்
கலந்தவன் தாளணை கிற்பீர்"

என்று பெரிய திருமொழி பரவும்.

இதனால்தான் நாராயணனுக்கு ஸ்ரீநிவாசன் என்ற பெயர் ஏற்பட்டது. 'ஸ்ரீ'யான திருமகளை எப்பொழுதும் தன் மார்பில் வாசம் செய்ய வைத்துக் கொண்டிருப்பவன் (ஸ்ரீநிவாசன்). இதனைத்தான் குமரகுருபரர்,

"பைஞ்சூட்டு நெட்டுடல் விரிக்கும்
படப்பாயல்
மீமிசைத் துஞ்சு நீல
மேகத்தின் ஆகத்தில் விடுசுடர்ப்
படலைமணி
மென்பரல் உறுத்த நொந்து"

என்று பாடுகிருர்.

ஆதிசேஷனாகிய படுக்கையில் பள்ளி கொண்டிருக்கும் நீலமேகம் போன்ற சியாமள வண்ணன் அணிந்திருக்கும் கௌஸ்துபமணியானது மார்பில் வாசம் செய்யும் திருமகளை உறுத்துகிறது என்று கற்பனை செய்து மகிழ்கிருர்.

விஷ்ணு தன் கௌஸ்துப ரத்தினத்தை மார்பில் தரித்திருப்பதால் அவரின் மார்பில் இடங்கொண்டிருக்கும் இலக்குமி தேவிக்கு அது சிறந்த கண்ணுடியாக பிரதிபலிக்கிறது என்பார் காளிதாசர்.

சிவபெருமானின் இடப்பாகத்திலிருந்து உமாதேவியார் தோன்றினர் என்று புராணங்கள் கூறும். இடப்பாகத்திலிருந்து தோன்றிய உமைக்கு இடப்பாகத்தையே தந்து விட்டாரோ?

ஆக கடவுளர் யாவருமே பெண்ணுக்கு உரிய இடத்தை அளித்துள்ளார்கள் என்பது வெளிப்படை. நாமும் பெண்ணுக்குரிய இடத்தை அளித்து அவர்கள் நெஞ்சில் நமக்குரிய இடத்தைப் பெறுவோம்.

நம்மைப் போன்ற அடியார்களின் உள்ளத்தில் இறைவன் உறைவான் என்பது திண்ணம்.

"பேணுத வலியர்க்கர் மெலியவன்று
பெருவரைத்தோ ளிறநெரித்தன்
றவுணர்கோனை
பூணுகப் பிளவெடுத்த போர்-
வல்லோனைப்
பொருகடலுள் துயிலமர்ந்த
புள்ளூர்தியை
ஊணுகப் பேய்முலைநஞ்
சுண்டான்றன்னை
உள்ளுவா ருள்ளத்தே
யுறைகின்ருனை

என்று அன்பர் உள்ளத்தில் இறைவன் உறைவான் என்று திண்ணமாகச் சொல்கிருர் பெரியாழ்வார்.

இதையேதான் வேறுவிதமாக திருவாசகத்தில்

"உடையாள் உன்றன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீயுருத்தி
அடியே னடுவு ளிருவீரு மிருப்ப
தானா லடிவேனுன்
அடியார் நடுவு ளிருக்கு மருளைப்
புரியாய் பொன்னம் பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே"

என்று மாணிக்கவாசகர் கூறுகிருர்.

"உள்ளத்தில் உள்ளானடி, அதை நீ உணரவேண்டுமடி" என்று பாடியவாறு நம் 'உள்ளத்தில் உறையும் அவன் தாள் பணியும் பணியை நாம் விடாது செய்தலே உரிய வழியாகும். *

இளைஞர் பகுதி:

# மதுவினால் வரும் ஆபத்து

இரணியல் ரவி - நெய்யூர்.

எவ்வளவு பெரிய மனிதராக இருந்தாலும் மதுவுக்கு அடிமையாகி தெரிந்தோ தெரியாமலோ பருகினால், அதன் காரணமாகத் தொல்லைகள் பல அனுபவிக்க நேரிடும் என்பதற்கு, இந்து மத புராணங்களில் நிறைய கதைகள் சொல்லப்பட்டிருக்கின்றன.

இதற்கு எடுத்துக்காட்டாக நம் சகோதர சகோதரிகளுக்கு நான் மகாபாரதத்தில் இருந்து ஒரு கதையைச் சொல்கிறேன்.

மூன்று உலகங்களையும் யார் ஆட்சி புரிவது என்பதில் தேவர்களுக்கும், அசுரர்களுக்குமிடையே ஒரு பெரிய யுத்தமே நடந்தது! தேவர்களுக்கு பக்கபலமாக புரோகிதர் பிரகஸ்பதியும், அசுரர்களுக்கு பக்கபலமாக புரோகிதர் சுக்ராச்சாரியாரும் இருந்து வந்தார்கள். புரோகிதர் பிரகஸ்பதியைவிட, புரோகிதர் சுக்ராச்சாரியார் மந்திர தந்திர வித்தைகள் அதிகம் கற்றவர். இறந்து போனவர்களை 'சஞ்சீவினி வித்தை' யைக் கொண்டு உயிர் பிழைக்க வைக்க அவருக்கு மட்டுமே தெரிந்திருந்தது! இந்த வித்தை, தேவர்களுக்குத் துணை நின்ற புரோகிதர் பிரகஸ்பதியாருக்குத் தெரியாது. ஆகவே யுத்தத்தின் போது எத்தனை அசுரர்களைத் தேவர்கள் கொன்றபோதும்கூட, சுக்ராச்சாரியார் தன்னுடைய சஞ்சீவினி வித்தையால் பிழைக்க வைத்துவிடுவார். இது தேவர்களுக்கு பெரியதொரு பேரிடியாக இருந்தது. எந்த வகையிலாவது சஞ்சீவினி வித்தையை சுக்ராச்சாரியாரிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டுமென்று அவர்கள் துடித்தார்கள்.

'அசுரர்களுக்கு உதவியாக இருக்க ஒப்புக் கொண்டிருந்த சுக்ராச்சாரியார், என்ன வந்தாகவும் தங்களுக்கு அந்த வித்தையை சொல்லித் தரப் போவதில்லை' என்பது தேவர்களுக்கும், புரோகிதர் பிரகஸ்பதியாருக்கும் நன்ருகத் தெரியும். ஆகவே, அவரை வேறு வழியில் ஏமாற்றி, சஞ்சீவினி வித்தையைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று முடிவு செய்தார்கள்.

புரோகிதர் பிரகஸ்பதியாரின் மகன் கசன் என்பவன் அறிவுடையவனாகவும், மூன்று உலகத்திலும் சிறந்த அழகனாகவும விளங்கினான். அசுரர்களுக்கு துணை நிற்கும் புரோகிதர் சுக்ராச்சாரியாருக்கு, தேவயானி என்று அழகானதொரு பெண் இருந்தாள். கசனை புரோகிதர் சுக்ராச்சாரியாருக்குப் பணிவிடை செய்ய அனுப்பி, அவருடைய நம்பிக்கையைப் பெறுவதுடன், அவருடைய மகளுடைய அன்பையும் பெற்ருல், எப்படியாவது சஞ்சீவினி வித்தையைக் கற்றுக் கொள்ள ஏதுவாகும் என தேவர்கள் முடிவு செய்தார்கள்.

கசன் புரோகிதர் சுக்ராச்சாரியாரை எப்படியோ கவர்ந்து, அவருடைய சிஷ்யனாக சேரந்து கொண்டான். தான், புரோகிதர் பிரகஸ்ரபதியின் மகன் என்ற உண்மையையும் அவன் அவரிடமிருந்து மறைக்கவில்லை. அவன் உண்மை பேசியது சுக்ராச்சாரியாரை மிகவும் கவர்ந்தது. பல வருடங்களாக புரோகிதர் சுக்கராச்சாரியாருக்கும், அவர் மகள் தேவயானிக்கும் நம்பிக்கையுடையவனாக கசன் பணிவிடை செய்து, இருவருடைய மனதையும் கசன் கவர்ந்து கொண்டான்.

கசன், எப்படியாவது தங்கள் குரு சுக்ராச்சாரியாரிடமிருந்து, சஞ்சீவினி வித்தையைக் கற்றுக் கொள்வான என்று அசுரர்கள் மிகவும் பயப்பட்டார்கள். ஆகவே, ஒரு நாள் கானகத்தில் பசு மேய்த்துக் கொண்டிருந்த கசனை அசுரர்கள் துண்டு துண்டாக வெட்டி, நாய்களுக்கு இரையாக வீசினார்கள். இரவு

வெகு நேரமாகியும் கசனைத் திருப்பிக் காணாத தேவயானி, 'கசனுக்கு ஏதோ ஆபத்து நேர்ந்திருக்கிறது' என்று சொல்லி தந்தையிடம் அழுதாள். மகளை உயிருக்கும் மேலாக நேசித்த புரோகிதர் சுக்ராச்சாரியார் சஞ்சீவினி வித்தையை மனதிலே நினைத்து 'கசனே உயிர் பெற்று வா' என அழைத்தார். கசனும் நாய்களுடைய உடலைப் பிளந்து கொண்டு எழுந்து வந்தான்.

இதைப் போலவே, இரண்டு மூன்று தடவைகள் அசுரர்கள் கசனைக் கொன்ற போதும், மகள் மீது பாசம் கொண்ட புரோகிதர் சுக்ராச்சாரியார் சஞ்சீவினி வித்தையை உபயோகித்து கசனுக்கு உயிர் கொடுத்தார்.

வேறு வழி தெரியாத அசுரர்கள் கடைசியாக கசனைக் கொன்று, அவன் உடலைச் சுட்டு சாம்பலாக்கி, 'அவ்வளவு பெரிய புரோகிதருக்கு மது மீது இருந்த ஆசையை' அறிந்து வைத்திருந்த அசுரர்கள், அந்த சாம்பலை மதுவில் நன்றாக கரைத்து, புரோகிதர் சுக்ராச்சாரியாருக்கே கொடுத்து விட்டார்கள்.

கசன் என்ன ஆனான் என்பது தெரியாத புரோகிதர் சுக்ராச்சாரியார், தன்னுடைய சக்தியால் 'கசன் என்ன ஆனான்' என்பதைத் தெரிந்து கொண்டார். கசனுக்கு உயிர் கொடுப்பதால் அவன் தன் வயிற்றைக் கிழித்துத்தான் வெளியே வர நேரிடும் என்றும், ஆகவே தான் மரணமடைய நேரிடும் என்றும், தன் மகள் தேவயானிடம் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார் புரோகிதர் சுக்ராச்சாரியார்.



ஸ்ரீமாரிகாம்பா ஆலயம் - சிரஸி
உத்தர கர்நாடகம்.

ஆனால் தேவயானியோ எப்படியும் கசனுக்கு உயிர் கொடுத்தாக வேண்டுமென்று அடம் பிடித்தாள்.

'தன் சீடன் ஒருவனையே இப்படிக் கொலை செய்யும் அசுரர்களுக்கு உதவுவதை விட, கசனுக்கு உயிர் கொடுப்பது மேல்' என்று புரோகிதர் சுக்ராச்சாரியார் முடிவு செய்தார்.

வயிற்றிலிருந்த கசனுக்கு 'சஞ்சீவினி வித்தை'யை உபதேசித்து விட்டு, 'நீ என் வயிற்றைக் கிழித்தபடி உயிர் பெற்று வெளியே வந்ததும், நான் இறந்து விடுவேன். சஞ்சீவினி வித்தையை பயன்படுத்தி நீ எனக்கு உயிர் கொடுக்க வேண்டும்' என்று சொல்லி, 'சஞ்சீவினி வித்தை'யை பயன்படுத்திக் கசனை உயிர் பெற்றுவர அழைத்தார். புரோகிதர் சுக்ராச்சாரியாரின் வயிற்றைக் கிழித்தபடி கசன் வெளியே வந்து, சஞ்சீவினி வித்தையை பயன்படுத்தி புரோகிதர் சுக்ராச்சாரியாருக்கு உயிர் கொடுத்து எழ வைத்தான்.

'சஞ்சீவினி வித்தை'யை பயன்படுத்தி தேவர்கள், அசுரர்களை வென்றார்கள்.

'மதுவிற்கு அடிமையாகும் முனிவராக இருந்தாலும் சரி, சாதாரண குடிமகனாக இருந்தாலும் சரி, அவனையறியாமல் ஆபத்து காத்திருக்கும்' என்று, குரு சுக்ராச்சாரியார் உலகிற்கு உபதேசம் செய்தார். *

# சிந்தனையும் தெளிவும்

திரு. இரா. கோபாலகிருஷ்ணன் சென்னை

உலகில் பிறப்பெடுத்துள்ள பல்வேறு உயிர்களில் சிந்திக்கும் ஆற்றல் அதிகம் பெற்றிருப்பது மனித இனம்தான். அந்த ஆறுவது அறிவினை மனிதன் ஆக்கப் பூர்வ வழிகளில் செயல் படுத்த முனையும் போது விஞ்ஞான முன்னேற்றம் ஏற்படுகிறது. அதுவே மனித இன அழிவுக்கும் வழிகோலுகிறது. சிந்தனையைத் தன் வயப்படுத்தி, 'நான் யார்?' 'என் உள்ளம் யார்?' 'ஏன் பிறப்பெடுத்தேன்?' 'இறப்பு ஏன் ஏற்படுகிறது?' 'இறப்பை நிறுத்த முடியாதா?' 'இறப்பிற்குப்பின் மனிதனின் நிலை என்ன?' என்பன போன்ற வினாக்களுக்கு விடையளிக்க முற்படும் போர்து ஆன்மிகம், தெய்வீகம் போன்ற செய்திகள் அவனுக்கு உறுதுணையாக நிற்கின்றன.

'பிறப்பு இறப்பு என்னும் சுழிபட்டுத்
தடுமாறும் ஆதமிலி நாயினேனை'

என்றும்,

'இன்பம் பிறப்பு இறப்பினோடு
துன்பமும் உடனே வைத்த சோதியன்'

என்றும்,

'மற்றுப்பற்று எனக்கின்றிநின் திருப்பாதயே
மனம் பாவித்தேன் பெற்றலும் பிறந்தேன்
இனிப்பிறவாத தன்மை வந்தெய்தினேன்

என்றும்,

'எல்லாப் பிறப்பும் பிறந்து
இளைத்தேன் எம்பெருமான்

என்றும்,

இறையின்

பத்தை உய்த்துணர்ந்த அடியவர்கள் கூறுவதை சிந்திக்கத் தோன்றும். அவ்வாறு சிந்திக்கும் போது பிறக்கும் தெளிவே ஆன்மீக நெறியில் நின்று தெய்வத்தை உள்ளகத்தே வணங்கி உய்தி பெற வழி கோலுகிறது.

பெரிய திருவந்தாதியில் நம்மாழ்வார் அருளிச்செய்கின்றார்.

பிறப்பு இறப்பு மூப்புப் பிணி துறந்து பின்னும்
இறக்கவும் இன்புடைத்தா மேலும்- மறப்பு எல்லாம்
ஏதமே என்றுஅல்லால் எண்ணுவனே மண் அளந்தான்
பாதமே ஏத்தாப் பகல்

அதாவது பிறப்பு, இறப்பு, வயோதிகம், நோய் ஆகியவற்றை ஒழித்து அதற்கு மேலும் சென்று மிகுந்த சுகமான அனுபவத்தை அடைந்தானாகிலும், ஓங்கி உலகளந்த உத்தமனான எம் பெருமானுடைய திருவடிகளைத் துதிக்காத காலத்தில் உள்ள மறப்பு எல்லாம் துக்கம் தான். இவ்வாறு நினைக்காமல் வேறு எவ்வகையில் நினைக்கமுடியும்? எனவே பிறப்பு இறப்பை நிறுத்த முடியும் என்பதும், அதற்கு மேலே பேரின்பப் பெருவாழ்வு உண்டு என்பதும் எவ்வித வாழ்வாயிருப்பினும் இறைவனுடைய திருவடிகளை மறக்காமல் இருப்பது அவசியம் என்பதும் இதனால் பெறப்படுகிறது.

உண்மையான இன்பம் இறைவனைத் தொழும் நாட்களில் ஏற்படுகிறது என்றும், துன்பம் உன்னைத் தொழாத நாட்கள் தான் என்றும் அப்பர் பெருமான் கூறுகின்றார். 'பெரும் பெற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவாத நாளே' என்றும் காட்டுவதிலிருந்து பிறப்பெடுத்ததன் பயன் இறைவனைப் பற்றிப் பேசவேண்டும்; அவன்திருநாமம் செப்ப வேண்டும்; புகழைக் கேட்க வேண்டும்; வாசனைப்பொருட்களை (பூசைக்கு உகந்தவை) முகர வேண்டும்; ஆலயத்திற்குக் கால்களால் நடந்து செல்ல வேண்டும்; கைகளால் கூப்பித் தொழ வேண்டும்; உடம்பெடுத்ததன் பயன் இறைவனது அருளை முழுமையாகப் பெற்று அனுபவிக்க வேண்டும்.

பிறப்பு, இறப்பு ஆகியவற்றை நீக்கினால் பேரின்பம் கிட்டும் என்பது உண்மையானால் எவ்வாறு அவற்றை நீக்க முடியும்? மனிதனோ குறைவான அறிவும், ஆற்றலும், திறமையும் உடையவன் - எனவே தான் பிறவியென்னும் பெருங்கடலைக் கடக்க இறைவன் எனும் தோணிகொண்டு கடக்க வேண்டும். நம்மாழ்வாரும்,

48 -ஆம் பக்கம் பார்க்க

# செய்திச் சுருக்கம்

திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ பாலாஜி உடல் ஊனமுற்றோர் நிலையத்தின் பெயர் தற்போது 'ஸ்ரீ பாலாஜி உடல் ஊன முற்றோர் மறுவாழ்வு மற்றும் ஆராய்ச்சி மையமாக' பெயர் மாற்றஞ் செய்யப்பட்டுள்ளது.

* * * *

திருமலைக்கோயிலில் வருடாந்திர புஷ்பயாகம் இவ்வருடம் அக்டோபர் மாதம் 13ஆம் தேதி வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. மதியம் 1 மணியிலிருந்து மாலை 5 மணி வரை நடைபெற்ற இந்நிகழ்ச்சியில் நபர் ஒருவர் ரூ. 3500/- செலுத்தி 165 கிருஹஸ்தர்கள் பங்கேற்றனர். நிகழ்ச்சியின் இறுதியில் உத்ஸவரின் ஊஞ்சல்சேவையும் மற்றும் நான்கு மாடவீதிகளில் திருவீதி திருவலமும் நடைபெற்றன. இந்நிகழ்ச்சியில் தி.தி. தேவஸதான செயலாட்சித்தலைவர், திருமலைக்கோயில் உதவி செயலாட்சித் தலைவர், மத்திய அரசு தகவல் தொடர்பு துணை அமைச்சர் திரு. பி.வி. ரங்கய்ய நாயுடு மற்றும் தேவஸ்தான உயர் அலுவலர்களும் பங்கேற்றனர்.

* * * *

திருப்பதியிலுள்ள ஒரே சிவன் கோயிலான தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீகபிலேஸ்வர சுவாமி கோயிலில் 'திருக்கார்த்திகைத் திருவிழா' வெகுச்சிறப்பாக 21-11-91 அன்று நடைபெற்றது. அன்று மாலை நடைபெற்ற அபிஷேகம் மற்றும் மஹா மங்கள தீபோற்சவ நிகழ்ச்சியினை ஆயிரக்கணக்கான பக்தர்கள் கண்டு களித்தனர்.

* * * *

திருப்பதி ஸ்ரீஅன்னமாச்சார்யா கலாமந்திரத்தில் 18-11-91 அன்று தி.தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் ஸ்ரீதியாகராஜ பகுள பஞ்சமி ஆராதனை விழா வெகுச் சிறப்பாக நடைபெற்றது. ஆந்திரமாநில பேரவைத் தலைவர் ஸ்ரீபாதராவ் அவர்களும், தி.தி. தேவஸ்தான தலைமைப் பாதுகாப்பு அலுவலர் அவர்களும் முக்கிய விருந்தினர்களாக இந்நிகழ்ச்சியில் பங்கேற்றனர். அன்னமாச்சார்யா திட்டத்துறை ஒத்திசைவாளர் திரு. மேடசானி மோகன் நிகழ்ச்சிக்கு வருகை புரிந்தோரை வரவேற்றார். திரு. ஜி. பாலகிருஷ்ண பிரஸாத் மற்றும் திருமதி. துவாரம் வி.ஜே. லட்சுமி ஆகியோரின் இன்னிசைக் கச்சேரி நிகழ்ச்சிகள் நடைபெற்றன. இறுதியில் தி.தி. தேவஸ்தானம் வெளியிட்ட ஸ்ரீவாரி ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி வைபவம், ஸ்ரீநிவாசா கல்யாணம், ஸ்ரீவாரி ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி பிரம்மோத்ஸவம் ஆகிய நிகழ்ச்சிகள் ஒளிபரப்பப்பட்டன.

* * * *

தி.தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் பிரபல ஆயுர்வேத மருத்துவரான வைத்யரத்னா ஸ்ரீபாலராஜ் மகரிஷி அவர்களின் நேரடி மேற்பார்வையில் திருப்பதி பிரகாசம் சாலையிலுள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீவேங்கடேஸ்வரா உயர்நிலைப்பள்ளி வளாகத்தில் ஒவ்வொரு மாதமும் இரண்டாவது சனி மற்றும் ஞாயிற்றுக்கிழமைகளில் முகாமிடுவார். இதுபோது வெண்குட்டம், புற்றுநோய், ஆஸ்த்துமா, காசநோய், இரத்த அழுத்தம், நரம்புத்தளர்ச்சி, இளம்பிள்ளை வாதம், சர்க்கரை வியாதி, பெண்கள் சம்பந்தப்பட்ட நோய்கள் போன்ற வியாதிகளுக்கான இலவச சிகிச்சையும், ஆயுர்வேத மருந்துக்களும் வழங்கப்படும்.

* * * *

## சொற்பொழிவுகள்

தி.தி. தேவஸ்தானத்தாரின் ஆழ்வார் திவ்யப் பிரபந்தச் செயல்திட்டத்தின் ஆதரவில் தமிழ்நாட்டில் நான்கு இடங்களில் ஆழ்வார்களின் 'பிரபந்த'ப் பாடல்கள் பற்றிய பல அறிஞர்களின் சமயச் சொற்பொழிவுகள் நடைபெற்றன. 12-11-91 அன்று காஞ்சிமாநகரில் ஸ்ரீஆனந்த பவனத்தில் ஸ்ரீஉ.ப.வே. டி.ஏ. கிருஷ்ணமாச்சார்யார் தலைமையில் 'மொழிவிளக்கும் வாழி விளக்கம்' என்ற தலைப்பில் ஸ்ரீஉ.வே. டி.ஏ. ஆனந்தாழ்வான் சுவாமிகளும், 'திருவேங்கடமுடையானும் தேவாதிராஜனும்' எனும் தலைப்பில் ஸ்ரீஉ.வே. ஸ்ரீநிவாசாதாதாசார்ய சுவாமிகளும் உரையாற்றினர்.

13-11-91 அன்று சென்னையை அடுத்த மகாபலிபுரத்தில் ஸ்ரீ ஸ்தலசயனத்துறைவார் பெருமாள் கோயில் வளாகத்தில் சென்னையைச் சார்ந்த ஸ்ரீ உ.வே. பிள்ளைலோகம் ஸ்தலசயனத்துறைவார் சுவாமிகளின் தலைமையில் 'மூவரில் முதல்வன்' எனும் தலைப்பில் சென்னை 'திருமால்' பத்திரிகை ஆசிரியர் ஸ்ரீ உ.வே. குமாரவாடி எஸ். ராமானுச்சாரியார் சுவாமிகளும், ஸ்ரீ உ.வே. டாக்டர் எம்.எஸ். ரங்காச்சாரி அவர்களும் சொற்பொழிவாற்றினர்.



15-11-91 அன்று சென்னை திருவல்லிக்கேணி வானமாமலை மடத்தில், சென்னைப்பல்கலைக்கழகப் பேராசிரியர் எம். நரசிம்மாசார்யா தலைமையில், 'மூவர் ஏற்றிய மொழிவிளக்கு' எனும் தலைப்பில் பேராசிரியர் கே.ஏ. மணவாளன் அவர்களும், 'முதலாழ்வார்களும், ஸ்ரீவைஷ்ணவமும்' எனும் தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழக உயர்விரிவுரையாளர் (வைணவத்துறை) முனைவர் வி.கே.எஸ். ராகவன் அவர்களும் சொற்பொழிவாற்றினர். அன்று மாலை சென்னை 'யதிராஜ பாதுகா' பத்திரிகை ஆசிரியர் பேராசிரியர் வி.வி. ராமானுஜம் தலைமையில், 'பேயாழ்வார்' பற்றி சென்னைப் பல்கலைக்கழக முனைவர் எம்.எ. வேங்கடகிருஷ்ணன் அவர்களும், "முதலாழ்வார்கள் சிந்தனையில் திருவேங்கடவன்" தலைப்பில் பேராசிரியர் முனைவர் என். சுப்புரெட்டியார் அவர்களும் சொற்பொழிவாற்றினர்.






17-11-91 அன்று திருநகரியில்



**ஸ்ரீதாயார் சன்னதியில்** உ.வே. எம்பார் மேலத்திருமாளிகை சடகோபாச்சார்யா சுவாமி தலைமையில், "திருமங்கைமன்னனும் திருநாங்கூர் திவ்ய தேசமும்" எனும் தலைப்பில் ஸ்ரீ உ.வே. பி.பி.கே. ஸ்ரீநிவாசாசார்யா சுவாமிகளும், பேராசிரியர் ஏ.வி. ரங்காசார்யா சுவாமிகளும் (அண்ணமலைப்பல்கலைக்கழகம், சிதம்பரம்) உரையாற்றினர்.

அடுத்தநாளன்று மேற்குறிப்பிட்ட சன்னதியில் **ஸ்ரீஉ.வே.** எம்பார் கீழத்திருமாளிகை கிருஷ்ணமாச்சார்ய சுவாமிகள் தலைமையில், ஸ்ரீஉ.வே. புலவர் ராமபத்ராச்சார்யா சுவாமிகளும் ஆழ்வார்கள் பற்றிய பொருள் மீது சொற்பொழிவாற்றினர்.

*****

---




**ஒரு கோடுச் சித்திரம். — ஏ. வெங்கட்ராமய்யா - திருப்பதி.**

## கடவுளின் எண் குணங்கள்

1. தன் வயத்தனாதல்
2. தூயவுடம்பினனாதல்
3. இயல்பாகவே பாசங்களின்று நீங்குதல்
4. இயற்கையுணர்வினனாதல்
5. முற்றுமுணர்தல்
6. பேரருளுடைமை.
7. முடிவிலாற்றல் உடைமை.
8. வரம்பிலின[illegible]

திரு. கே. ராஜசேகர்
திருச்சி.

( -ஆம் பக்கத்தொடர்ச்சி)

வார்த்தை யறிபவர் மாயவற்
காளன்றி யாவரோ?
போர்த்த பிறப்பாடு நோயொடு
மூப்பொடு இறப்பிவை
பேர்த்துப் பெருந்துன்பம் வேரற
நீக்கித் தன்தாளின் கீழ்ச்
சேர்த்து அவன்செய்யும் சேமத்தை
எண்ணித் தெளிவுற்றே

என்று திருவாய் மொழிந்து அருளுவதிலிருந்து எம்பெருமானுடைய திருவருளினால்தான் துன்பங்களை வேரறுத்து பிறவாப் பெருநெறியில் வாழலாம் என்பது தெளிவாகிறது. வார்த்தை என்றது, 'என்னை முழுமையாகச் சரணமடைந்து விடு' என்பதாகும். இதனை முழுமையாக உணர்ந்தவர்கள் மாயங்களைச் செய்பவனையன்றி வேறொருவருக்கு ஆட்படுவரோ? ஆன்மாவை மறைக்கும் பிறப்பு, பிணி, மூப்பு, இறப்பு ஆகிய பெரும் கேடுகளைப் பேர்த்துத் தள்ளி எல்லாவிதத் துன்பங்களையும் வாசனை அற நீக்கித் தன் திருவடிக் கமலங்களில் சேரும்படி இறைவன் செய்வான். இவ்வாறு அபயம் அளித்து எம்பெருமான் நம்மை மீண்டும் பிறக்காதபடி செய்யும் காப்பு முறைமையை நாம் சிந்தித்துத் தெளிவடைதல் வேண்டும். இத்தகு தெளிவு வந்தபின் வேறொருவர்க்கு ஆட்பட வேண்டும் என்ற எண்ணம் எள்ளளவும் ஏற்படாது.



( 3-ஆம் பக்கத்தொடர்ச்சி)

முகுந்தன். முற்பிறவியின் வினைகளின் பயனாக இம்மானிடப் பிறவி கிடைத்தாலும் அப்பிறவியை மேன்மையாக்க இப்பிறவியே போதும் என்பதை அறிவுறுத்தி, கார்வண்ணன் தன் கருணையுள்ளத்தைக் கீதை மூலம் காட்டவே செய்தான்.

புலன்களை அடக்குதல், செயலில் நேர்மை, உணவு, உறக்கம் உள்ளிட்ட வாழ்க்கை நடைமுறைகளில் கட்டுப்பாடு, சமுதாய மேம்பாட்டில் தனிமனிதனின் பொறுப்பு, தியாகம், தன்னிலை இழக்காதிருத்தல், உணர்ச்சிகளை அடக்குதல், கோபம், காமம், பேராசை எனும் தீப்பண்புகளை நீக்குதல், அமைதி மற்றும் தியானத்தின் மேம்பாடு ஆகியவற்றின் பெருமையினையும், அவசியத்தையும் கீதை வாயிலாக பாமரனுக்கு பரந்தாமன் பார்த்திபனைக் கொண்டு பகர்ந்தான்.

கீதையின் போதனைகள் நடைமுறையில் பயன்படுமா? அல்லது பயன்படுத்த முடியுமா? என்பது பலரது ஐயவினாவாகும். இது கீதைக்குமட்டுமல்ல, உலக சமய சாஸ்திரங்களுக்கும் பொருந்தும். ஆயினும், இருண்ட காட்டினில் ஒருவன் தன் கையில் ஒரு தீப்பந்தத்தை வைத்திருந்தானேயாகில் அதனால் காட்டின் மூலை முடுக்குகளெல்லாம் அவனுக்குத் தெரிய வேண்டுமென்பதில்லை. அது அவனுடைய ஆர்வத்தைப் பொறுத்தது. ஆனால் அக்கைவிளக்கினால்; தான் நடந்து போகும் பாதை இடையூறின்றி உள்ளதா, ஆபத்தின்றி விளங்குகின்றதா, தாம் சரியான வழியில் செல்ல வழிகாட்டுகின்றதா என்பவற்றை அறிந்து கொள்ள பயன்படுகின்றதா என்பதை அறிதல் அவசியம். அவ்வகையில் கீதை என்பது ஒரு வழிகாட்டிதான். தனி மனிதன் திருந்தினால், அவன் வாழும் சமுதாயமும் தானாக திருந்திடும் என்பது கீதை காட்டிடும் நற்போதனை.

ஆகவே உண்மையான அன்பு, ஆக்கப்பூர்வமான அறிவு, ஆற்றலுடன் கூடிய ஒழுக்கம் ஆகியவனவே மானிடத்தை முழுமையடையச் செய்யும், மாண்புடையதாக்கும் என்பதை கீதை அறிவுறுத்துகின்றது. நம்பிக்கையுடன், ஆர்வத்துடன், அமைதியுடன் கீதை கூறும் கருத்துக்களை மீண்டும் மீண்டும் கற்று உணர்ந்தோமேயானால் 'கீதை ஜெயந்தி' நம் வாழ்வில் ஒரு சீரிய மாற்றத்தை உண்டாக்க வழிவகுக்கும்.

Edited and Published on behalf of the T.T. Devasthanams by K. Subba Rao, M.A., and printed
at T.T.D. Press by M. Vijayakumar Reddy, Manager, T.T.D. Press, Tirupati-517 507.

